ல் நிலைய வெளியீடு - 16

உ

நந்திகேசுவரர்

இயற்றிய

# அபிநயதர்ப்பணம்

வீரராகவையன்

*தமிழ் மொழிபெயர்ப்பு*

மூலமும் உரையும்

டெல்லி, சங்கீத நாடக அகாடமி
அன்புடன் அளித்த பொருளுதவி கொண்டு
வெளியிடப்பெறுவது

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
அடையாறு, சென்னை–20
1957

# முகவுரை

வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதா யாண்டு கொண்டவா
ஊனை நாடக மாடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே.

—திருவாசகம்

தமிழ், இயல், இசை, நாடகம் என்ற முப்பகுதிகளை உடையது. இவை ஒவ்வொன்றிலும் மிகப் பழங்காலம் தொட்டே நூல்கள் பல வழங்கி வந்துள்ளன. அவற்றுள் பல இப்பொழுது காணக் கிடைக்காவிட்டாலும், கலையறிவு இந்நாட்டில் என்றும் வற்றியதில்லை என்பதற்குச் சான்றுகள் பல உண்டு.

இன்றும் தமிழகம் பரதநாட்டியம் என்ற துறையில் சிறந்தோங்கி விளங்குவதை நாம் காண்கிறோம். அந்நாட்டியத்திற்குரிய பல நூல்கள் பழங்காலம் முதற்கொண்டு வடமொழியிலிருந்து பெயர்க்கப்பெற்றும், தமிழிலேயே யாக்கப்பெற்றும் கலைஞர்களால் கையாளப்பட்டு வந்தன. ஆனால், கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக அந்நூல்கள் போற்றுவாரற்றுப் போனமையால் அவற்றின் இருப்பே மறைவதாகி, மாணவர்களும் ஆசிரியர்களும் பிறமொழி நூல்களை மட்டுமே கையாள வேண்டிய நிலை உண்டாயிற்று. ஆயினும், இப்பொழுது கலைஞர்களும் அரசியலாரும் காட்டிவரும் ஊக்கத்தால் நாட்டியக் கலைக்குரிய தமிழ் நூல்கள் பல தேடியெடுக்கப்பெற்றுப் பிரசுரிக்கப்படுவது மகிழ்ச்சிக்குரியதாகும்.

மறைந்துபோன பல பண்டை இலக்கிய நூல்களைத் தேடிக் கண்டெடுத்து உலகுக்கு உதவுவதற்காகவே தோன்றிய **மகா மகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள்** சில கலைச்சுவடிகளையும் சேகரித்து வைத்தது தமிழகம் செய்த பேறேயாகும். அவற்றினுள் **மகாபரதசூடாமணி** யென்னும் மிக அரிய நூல் 1–6–1955ல் இரண்டு பகுதிகளாகச் சிறந்த ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன், இந்நூல் நிலையத்தால் வெளியிடப்பெற்றது.

**அபிநயதர்ப்பணம்** என்னும் இந்நூல் முன்பே வடமொழியிலும், ஆங்கிலத்திலும், தெலுங்கிலும், பிறமொழிகளிலும் வல்லோர்களால் ஆராய்ந்து வெளியிடப்பட்டுள்ளன. வடமொழிச் சுலோகங்களை அவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்போடு பிரசுரித்த ஸ்ரீ காவியதீர்த்த மனோமோகன் கோஷ் என்ற பேரறிஞர் நாட்டிலுள்ள பல நூல் நிலையங்களினின்றும் மூலச் சுவடிகளைப் பெற்று ஆராய்ந்து தம் பிரசுரத்தை உருவாக்கியதாகக் கூறுகின்றனர். இச்சுவடிகள் யாவும் பொருளடக்கத்தில் ஒன்றோடொன்று ஒவ்வாமல், சுருங்கியும் விரிந்தும் காணப்படுவதை அவர் தம் முகவுரையில் நன்கு சுட்டிக்காட்டியுள்ளார்.

இந்நூல் நிலையத்திலிருந்து முன்பு வெளியான மகாபரத சூடாமணி என்னும் நூல் **அபிநயதர்ப்பண விலாசம்** என்ற பெயரையும் தாங்கியுள்ளது. அபிநயத்தையன்றி இன்னும் பல அரிய செய்திகள் அதனில் விரிந்து கூறப்பட்டுள்ளன. அந்நூலின் சுருக்கமாகவும், அபிநயங்களைமட்டும் கூறுவதாகவும் அமைந்துள்ளதே இப்பொழுது வெளியாகும் **அபிநயதர்ப்பணம்** என்னும் இந்நூல். இதன் பாடல்கள் மகாபரதசூடாமணியில் உள்ள பாடல்களைப் பெரும்பாலும் ஒத்துள்ளமையும் நோக்கத்தக்கது.

வடமொழி அபிநயதர்ப்பணம் **நந்திகேசுவரரால்** இயற்றப்பெற்றது என்பது யாவரும் ஒப்புக்கொண்ட செய்தி. ஆனால் இத்தமிழ் மொழிபெயர்ப்பு நந்திகேசுவரர் பெயரைக் குறிக்காமல், 'பரதசாத்திரத்தின் முன்னோ, ரோதிய வடமொழிச்சொலுரையபிநயநன் னூலை' என்றே கூறிச் செல்கின்றது. இதனை மொழிபெயர்த்தவர், 'குருகூர் நம்மாழ்வார் பாதபங் கயம்பணிந்து, . . . . மேதகுந் தமிழாற் செய்தான் **வீரராகவையன்** ருனே' என்ற இந்நூலின் பாயிரப்பாடற் பகுதியால்,

**வீரராகவையன்** என்றவர் என்பது தெரியவருகிறது. இவரைப் பற்றி வேறொன்றும் புலப்படவில்லை.

ஸ்ரீ ஐயரவர்களின் தொகுப்பில் இந்நூலுக்கு உரிய காகிதச் சுவடி ஒன்றே உள்ளது. மூலச்சுவடியையோ வேறு பிரதிகளையோ நாடிப் பெறச் செய்த முயற்சி பயனளிக்கவில்லை. கிடைத்த பாடங்களும் பிழை மலிந்து கிடந்தன. அவற்றை மகாபரத சூடாமணிப் பாடல்களோடும் வடமொழிச் சுலோகங்களோடும் பலமுறை ஒப்பிட்டுச் சரிசெய்து இப்பொழுது பதிப்பிக்கலாயிற்று. தமிழ்நாட்டில் நாட்டியம் பயிலும் மாணவர்க்கு வடமொழி அபிநயதர்ப்பணத்தின் நேர் மொழிபெயர்ப்பான இந்நூல் இன்றியமையாததாக விளங்கும் என்ற எண்ணத்தாலும், தாய்மொழியிலுள்ள பழைமையான இச்சிறந்த கலைநூல் முற்றிலும் அழிந்துபோகாமல் காப்பாற்றப்பட வேண்டுமென்ற கருத்தாலும் இது பிரசுரிக்கப் பெறுகின்றது.

அபிநயங்களை மட்டுமே கூறும் இந்நூலுக்கு முற்சேர்பாகவும் பிற்சேர்பாகவும் பல இன்றியமையாச் செய்திகள் மகாபரத சூடாமணி என்னும் நூலிலிருந்து தேர்ந்தெடுத்துக் கூறப்பட்டுள்ளன. இப்பாடல்கள் யாவும் தமிழ் இலக்கணவளம் செறிந்து விளங்காவிடினும், எளிமையும், கலைவளமும், நேர்மையும் பெற்றுள்ளன. அவற்றையும் முடிந்த வரையில் பதங்களைப் பிரித்தும், நிறுத்தற் புள்ளிகளைக் காட்டியும் கொடுத்திருக்கிறோம். பாடல்களின் பொருள்களையும் இலக்கணம், விநியோகம் என்ற தலைப்புக்களின் கீழ்க் கொடுத்துள்ளோம். செய்யுள்களுக்கு ஏற்ற வடமொழிச் சுலோகங்களை அவ்வவற்றின் கீழே கொடுத்திருக்கிறோம். இச்சுலோகங்களை ஆராய்ந்தெடுத்துப் பிழையற எழுதி உதவியவர் இந்நூல் நிலையத்தில் பணியாற்றிவந்த பண்டிதர் வியாகரண சிரோமணி ஸ்ரீ தி. இராமாநுஜ ஐயங்காரவர்களாவர்.

இந்நூலின் தரத்தை ஆராய்ந்தும், அடிக்கடி எழும் ஐயங்களுக்கெல்லாம் விடைகூறி ஊக்கியும், அச்சுக்காகிதங்களை நோக்கிப் பிழை களைந்து உதவியும் பேருதவி புரிந்தவர் கலாக்ஷேத்திரத்து நாட்டியக்கலைப் பேராசிரியரான ஸ்ரீமதி S. சாரதா அம்மாள் அவர்கள். படங்களைத் தயாரிக்க உடனிருந்து உதவிய கலாக்ஷேத்திரம் நாட்டிய உதவிப் பேராசிரிய

ரான ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி அம்மாளும், படங்களை எழுதி உதவிய ஓவியக்கலை நிபுணர் ஸ்ரீ S. P. ஸ்ரீநிவாஸன் அவர்களும் செய்த உதவிகள் மிகப் போற்றத்தக்கன. இவர்கள் யாவர்க்கும், இந் நூலை மிகச் சிறப்பான முறையில் அச்சிட்டு உதவிய அடையாறு, வஸந்தா அச்சகத் தலைவர் ஸ்ரீ M. சுப்பிரமணியம் அவர்களுக்கும், இப்பதிப்பின் முகப்பில் தோன்றும் அழகிய தெய்வத் திருவுருவப் படத்தின் ப்ளாக்கைக் கொடுத்துதவிய கலாக்ஷேத்ரம் புத்தகப்பிரசுரப் பகுதித்தலைவர் ஸ்ரீ நாச்சியப்பன் அவர்களுக்கும் எம்நன்றி மிகவும் உரியதாகும். அப்படம் ஸ்ரீ S. V. இராமமூர்த்தி அவர்களிடமுள்ள மூலவிக்ரகத்தின் படப்பிரதியாகும்.

இப்பதிப்பு வெளிவருதற்கு மூலகாரணம் **டெல்லி, சங்கீத நாடக அகாடமியின்** அன்பும் பொருளுதவியுமேயாகும். அந்த அகாடமிக்கும், நூலின் மூலத்தை நேரில் பரிசீலித்து அன்புடன் சிபார்சு செய்த **சென்னை மாகாணச் சங்கீத நாடகச் சங்கத்துக்கும்** எங்கள் கடமை மிகப் பெரியது. இவ்வுதவியை இந் நூல் நிலையம் என்றும் போற்றும்.

**ஸ்ரீ ஐயரவர்களே** இந்நூல் நிலையத்திற்கு மூலகாரணமாவர் ; ஆனால், இதன் இருப்புக்கும் வளர்ச்சிக்கும் காரணமாகின்றவர் கலாவல்லவரான **ஸ்ரீமதி பத்மபூஷணம் ருக்மிணி தேவியார்** அவர்கள். அவர்களின் கலைத்தொண்டுக்கும் தமிழ்த்தொண்டிற்கும் உலகம் அவர்களை என்றென்றும் போற்றும். இந்நூல் நிலையம் அவர்கள்பால் தான் கொண்ட கடப்பாட்டுக்கு அறிகுறியாக இச்சிறு நூலை அவர்களுக்கு அன்புடன் **அர்ப்பணம் செய்கின்றது.**

இந்நிலையத்தின் தொண்டுகள் உலகுக்குப் பயனுறச் செய்யவேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனின் திருவடிகளில் வணங்குகிறோம்.

*20-11-57*

# பொருளடக்கம்

## முற்சேர்பு



## நூல்

## பிற்சேர்ப்பு

உ

திருச்சிற்றம்பலம்

# அபிநயதர்ப்பணம்

## முற்சேர்பு

### 1. திருநடன வணக்கம்

பிரமன்றா ளம்போட, மால்படகந் தனைமுழக்க,
பேராம் வாணி
அருமையாம் வீணைகொள, சீர்ங்குழலி ரவிசசியும்
அடைவா யூத,
கிருபையுடன் தேவரொலி செய்ய, நந்தி மத்தளம், சங்
கீதத் தைத்தும்
புருமுழங்க, ரசம்பிறக்க, சிவனாடும் நடனத்தைப்
போற்று வேனே. (1)

*பிரமன் தாளம் போடவும், திருமால் படகத்தை முழக்கவும், புகழ் மிக்க கலைமகள் அருமையான வீணையை மீட்டவும், இரவியும் சசியும் அழகிய குழலை அடைவாக ஊதவும், தேவர்கள் அன்புடன் வாழ்த்தொலி செய்யவும், நவரஸம் பிறக்கச் சிவபிரான் செய்யும் நடனத்தைப் போற்றுவேன்.*

---

குறிப்பு: முற்சேர்பாக அமைக்கப் பெற்றுள்ள இப்பகுதி தமிழில் கிடைத்த அபிநயதர்ப்பணச் சுவடியில் காணப்படவில்லை. ஆனால் இது நாட்டிய அறிவுக்கு இன்றியமையாததாலும், வடமொழி அபிநயதர்ப்பண ஏடுகளிற் காணப்படுவதாலும், **மகாபரதசூடாமணி** என்ற எங்கள் பதிப்பிலிருந்து தேர்ந்தெடுத்து இங்குத் தரப்பட்டுள்ளது.

வடமொழி அபிநயதர்ப்பண நூல் பின்வரும் மங்களச் சுலோகத்துடன் தொடங்குகிறது.

आङ्गिकं भुवनं यस्य वाचिकं सर्ववाङ्मयम् ।
आहार्यं चन्द्रतारादि तं नुमः सात्त्विकं शिवम् ॥

## 2. நாட்டியத் தோற்றமும் வளர்ச்சியும்

ஆதியாம் பொருளில் முக்குணஞ் சேர,அம்
பரமெனுஞ் சத்தப் பிரமம்
ஆயதிற் றோன்று நாதம் தேவாத்
மகம்,தொன் னியாத்து மகமென்(று)
ஓதிய விரண்டு வகையுடன் தனித்த
உமையொரு பாகன்முன் னாளில்
உலகெனுங் கலைகள் ஈரெட்டை மேவி,
ஒப்பிலா ஆனந்தம் முதலா
ஏதமில் தாண்டவம் பதினாறும் ஏற்கையாய்
ஆடிடும் ; அப்போது ஏந்திய
உடுக்குக் கிண்கிணி கெச்சை இவற்றுள்
வியாகரண சூத்தி ரங்கள்
மீதுறும் கணமுத லாகிய நூல்கள் ;
விளங்குறும் அவற்றுள்இப் பரதம்
விண்ணவர் புகழ ஆடி, இப் பயனை
விரிஞ்சனுக் கோதினன் அரனே. (2)

*மூலப் பொருளில் முக்குணங்கள் கூட, சப்தப்பிரமத்தில் நாதம் தோன்றிற்று ; அது தேவாத்மகம், தொன்யாத்மகம் என்ற இருவகைப் பட்டது. அவற்றுள், பரமேசுவரன் உலகம் என்ற பதினாறு கலைகளுடன் பொருந்தி, ஆனந்தம் முதலான பதினாறு தாண்டவங்களையும் ஏற்று ஆடினார் ; அவர் அப்போது ஏந்திய உடுக்கை, கிண்கிணி, கெச்சை ஆகியவற்றிலிருந்து வியாகரண சூத்திரங்கள், கணங்கள் முதலிய நூல்கள் தோன்றின. அவற்றை அச்சிவபெருமான் தேவர்கள் புகழும் படி ஆடி அதன் பயனைப் பிரமனுக்கு ஓதினார்.*

---

இதன் பொருள் :

எவருடைய ஆங்கிகம் உலகமோ, வாசிகம் ஸர்வ வாக்குக்களுமோ, ஆஹாரியம் சந்திரன் நக்ஷத்திரங்கள் முதலியனவுமோ, அப்படிப்பட்ட ஸாத்விகச் சிவபிரானை வணங்குவோமாக.

இச் சுலோகம் ஸங்கீதரத்நாகரத்திலும் காணப்படுகிறது.

2–6. குறிப்பு : வடமொழி அபிநயதர்ப்பணம் கூறுவது : 'ஆதியில் பிரமன் நாட்டிய வேதத்தைப் பரதமுனிக்குக் கற்பித்தார்; பரதர், கந்தர்வர்களையும் அப்ஸரஸ்களையும் சேர்த்துக்கொண்டு, சிவபிரான் சந்நிதியில் நாட்டியம்,

விரிஞ்சன்அம் முறையை மறையுள்ஆ ராய்ந்து
விதிகளைப் பயன்படும் போது,
வேதமாம் இருக்கு தன்னுள் பாட்டியமும்,
மேன்மையாம் யசுர்வேதம் தன்னுள்
அரிதென விளங்கும் அபிநய மும்,பேர்
ஆகிய சாமவேதத் துள்அகி
லங்கொண் டாடும் கீதமும், மற்றும்
அதர்வண வேதத் துள் ரசமும்,
முறைகொளக் கண்டு, சாத்திரம் திரட்டி,
முப்பத் திரண்டு லட்சமதாய்
முழங்கிய கிரந்தம், தர்மார்த்த காம
மோக்ஷம்ஈந் திடுமென, பின்னும்
திரைகொளும் துக்கம் பயம்சோகம் வெறுப்புத்
தீங்குறு பேதங்கள் தீர்த்துத்
திறம்பெறும் ஆனந் தம்தரும் எனவே
செப்பியே வாழ்த்தினன் மலரோன். (3)

*அவ்வாறு பெற்ற முறையைப் பிரமன் வேதத்தினுள் ஆராய்ந்து விதிகளை உருவாக்கும் காலத்தில், இருக்கு வேதத்திலிருந்து பாட்டியமும், மேன்மையான எசுர் வேதத்திலிருந்து அருமையாக விளங்கும் அபிநயமும், பெருமை பெற்ற சாம வேதத்திலிருந்து கீதமும், அதர்வண வேதத்திலிருந்து இரசமும், (இவை அவ்வவற்றில் உள்ளபடியை அறிந்து எடுத்து), ஒரு சாஸ்திரத்தை உண்டாக்கி 32 இலட்சம் கொண்ட ஒரு நூலாக அதனைச் செய்தருளினான். பின்னும், அப்பிரமன்*

---

**நிருத்தம், நிர்த்தியம்** இவற்றை ஆடிக்காட்டினார். சிவபிரான் தாம் இயற்றிய மகத்தான நர்த்தனத்தை நினைவு மூட்டிக்கொண்டு, தம் கணங்களை அழைத்து, அந்த நர்த்தனத்தைப் பரதமுனிக்குக் கற்பிக்கச் செய்தார். இதற்கு முன் அவர் பார்வதியைக் கொண்டு அம்முனிவர்க்கு **லாஸ்யத்தைக்** கற்பிக்கச் செய்திருந்தார். தண்டு முனிவரிடமிருந்து இருஷிகள் **தாண்டவத்தைக்** கற்று மானிடர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். பார்வதி தேவி, பாணனுடைய குமாரி உஷைக்கு லாஸ்யத்தைக் கற்பித்திருந்தாள். உஷை அதனைத் துவாரகையிலுள்ள இடையர் பெண்களுக்குக் கற்பிக்க, அவர்கள் ஸௌராஷ்டிரப் பெண்களுக்குக் கற்பிக்க, அவர்கள் மூலமாய் அக்கலை பிறநாடுகளுக்குப் பரவிற்று. இவ்விதம் பாரம்பரியமாய் இக்கலை உலகில் பரவி நிலைக்கலாயிற்று.'

*அந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பேறுகளையும் தருமென்றும், அலைமோதும் துக்கம், பயம், சோகம், வெறுப்பு என்னும் தீமைகளைக் கொடுக்கும் வேற்றுமைகளை நீக்கி, வலிமையுள்ள ஆனந்தத்தைத் தரும் என்றும் சொல்லி வாழ்த்தினன்.*

**அம்முறை தன்னை நந்திகண் டே,நா**
**லாயிரம் கிரந்த மதாக**
**அருளிய அதனை, பரதமா முனிவன்**
**அறிந்து அரன் நோக்கியே நடிக்க**
**இம்முறை பெண்பா லாகில்நன் றென்றே**
**ஈசனார் நினைந்திட, உமையாள்**
**இன்பமே பயக்க ஈசன்முன் ஆடி**
**எழில்பெற, இவ்விரு முறையைத்**
**தம்மிலே வாணு சுரன் மகட்கு உரைக்க,**
**தையலுடன் சார்ஞி தேவன்,**
**தக்ஷிண கும்பமுனி, பாட்டன், பிருங்கி,**
**சார்ந்தநாதன், பிரகற் பதியும்,**
**செம்மைசேர் சுங்கன், தத்திலன், அநுமன்,**
**சிறந்தகோ களன்,அருச் சுனனும்,**
**திறமைசேர் . . . . . . . . . .**
**. . . . . . . . . . . . . . (4)**

*பிரமன் இயற்றிய அச் சாஸ்திரத்தை* **நந்திகேசுவரன்** *பார்த்து, நாலாயிரம் கிரந்தத்தில் ஒரு நூலைத் தான் இயற்றியருள, அதனைப் பரதமாமுனிவன் அறிந்து, அரன் முன்னிலையில் நடிக்க, "இதனைப் பெண்பாலர் நடித்திடுவராயின் நலமாகும்" என்று அவர் நினைத்தனர். அதனை அறிந்து உமையவள் ஈசுவரனுக்கு இன்பம் உண்டாகும்படி அவர்முன் ஆடி அழகுபடுத்தினள். இவ்வாறு உண்டான இரண்டு முறைகளையும் அவ்விருவர்களும் வாணுசுரன் மகளுக்கு உரைத்தனர். பிறகு சார்ஞிதேவர், அகஸ்தியர், பாட்டன், பிருங்கி, சார்ந்தநாதன், பிரகஸ்பதி, சுங்கன், தத்திலன், அநுமன், கோகளன், அர்ச்சுனன், . . . . . . .*

**காசிபன் வியாசன் வாணி கம்பளன் வாயு தேவன்**
**பேசிய யாஞ்ஞு வல்கன் வசிட்டனும் சேடன் பின்னும்**

மாசிலா தோங்கு விச்சு வாவசு உடனே பேராம்
தேசம தாளும் ராஜ சேகர வழுதி மற்றும், (5)

*காசிபன், வியாசன், ஸரஸ்வதி, கம்பளன், வாயுதேவன், யாஞ்ஞவல்கன், வசிட்டன், சேடன், விச்சுவாவசு, இராஜசேகர பாண்டியன்,*

திறமான ராவணனும், வாணு சூரன்,
சீராகும் அரசர்களில் விக்ர மார்க்கன்,
மருவிலா அரம்பையரும், போஜ னேடு
வாசுகியும், சத்திமுனி, உலகில் மற்றும்,
வருசோம நாதன், கோரட்சகன், பேர்வான்
நதியைப் புனைந்தோனும், வகைகள் தேர்ந்து
முறையாக நூல்களை உண்டாக்கித் தாமும்முன்
நடித்தும்உல கோர்க்கும் உரைத்திட் டானே. (6)

*இராவணன், வாணுசுரன், விக்ரமார்க்க மன்னன், அரம்பையர், போஜன், வாசுகி, சத்திமுனி, சோமநாதன், கோரட்சகன், வானதி புனைந்தோன் (கங்காதரன்) முதலியோர் நூல்களை ஆராய்ந்தும், தாமும் நூல்களை உண்டாக்கியும் நடித்தும் உலகோர்க்கு உரைத்திட்டார்கள்.*

## 3. சபாமண்டபம் முதலியன

### சபாமண்டபம்

உரையரங் கத்தில் வடக்குமுகத் திலேனும்
உற்றகீழ் முகத்திலேனும் துலங்குகின்ற
அரியா சனத்திற் சபாபதி யிருக்க,
அலங்கரித் தவன்றேவி யிடத்திருக்க,
பெருவலத் திலமைச்சன் வலமிடத் திற்கற்ற
பேரான கவிகா யகாளிருக்க,
பிரகரு திற்புவி யரசர்நின் றிருத்தல்
பெற்றியாம் சபாமண் டபத் தின்சீரே. (7)

*அரங்கத்தின் வடக்கு முகத்திலேனும் கிழக்கு முகத்திலேனும் சிம்மாசனத்தின் மீது சபாபதி இருக்க, அவன் தேவி அலங்காரங்களுடன் இடப்பக்கத்தில் இருக்க, வலப்பக்கத்தில் அமைச்சனும், வலமிடங்களில் கவிகாயகர்களுமிருக்க, மற்றப் புவியரசர்கள் நின்றிருத்தல் சபாமண்டபத்தின் சீராகும்.*

### சபாநாயக லக்ஷணம்

சீமான், சகல சாஸ்திர முணர்ந்தவன்,
கலாசோதனே தெரிந்த நிபுணன்,
தீம்பா வமற்ற வன், நற்குணம், தயவு, சத்
தியவாக் வி, தட்சண முளான்,
பூமான், பிரசன்னமுகன், தருமசிந் தனே, கீர்த்தி
பொறுமைஆ தரவை உடையோன்,
புண்ணியர் யாவரும் மதித்திடும் ஈகை
யான், புகழ் சௌர்ய ஞானஉசிதன்,
சேமவான், கீத வாத்ய நிருத்தச்
சுத்த தேசியத்தியல் பறிந்தோன்,
செய்ய சரசம் பொறுமை வேடிக்கை
தனில்நினைவு சென்றகன நயவிலாசன்,
காமன்நேர் அழகுடையன், ஊக முடையோன்,
இலக்கணம் இலக்கியம் அறிந்தோன்,
கனவான், தராதரம் அறிந்த சதுரன்
சபைக்கு அதிபனென் றேதும் நூலே. (8)

*ஸ்ரீமான், சகல சாஸ்திரம் உணர்ந்தவன், கலாசோதனை தெரிந்த நிபுணன், தீயபாவம் அற்றவன், நற்குணம் தயவு சத்திய வாக்கு தாக்ஷணியம் இவற்றை உடையவன், பூமான், பிரசன்னமுகன், தருமசிந்தனை கீர்த்தி பொறுமை ஆதரவு இவற்றை உடையோன், புண்ணியன், ஈகையாளன், புகழ் சௌர்யம் ஞானம் இவற்றில் சிறந்தவன், சரசம் பொறுமை வேடிக்கை இவற்றில் மனம் செலுத்தும் கன நய விலாசமுடையவன், காமன் ஒத்த அழகு உடையவன், யூகமுடையவன், இலக்கண இலக்கிய மறிந்தவன், கனவான், தராதரம் அறிந்த சதுரன், இத்தகையோன் சபைக்கு அதிபனுவான் என்று நூல்கள் கூறும்.*

### சபையிலுள்ளோர் இலக்ஷணம்

இரசிகர், கன்மஷ மில்லார், பொதுவர்,
மேன்மையுளர், எழில்சாவ தான முடையோர்;
இணையிலாப் படர்நயன காய கர்களின்
மறதி மோச மெல்லாம் பொறுத்துப்

பரிவுடன் நீதி விவரிக்கும் அறிவுடையர் ;
பாவா பாவம் உணர்ச துரராய்ப்
பாங்கான குணமுடையர், காரியத் தைரியம்
பண்பு பெறும்வி நயமு டையோர் ;
திரமுடைய மதமாச் சரிய மிலாதவர்
கள்,ஏற்றிட் டதுரு வாதம் இல்லார் ;
தீங்கற்ற நினைவுடையர், எக்கா லும்உப
காரம் செய்கின்ற சித்த முற்றோர் ;
பெருமைபெறு சபைநா யகன்நினைவை ஓர்ந்து
உசிதம் பேசு வசனத் திறமையோர் ;
பேராத பொறுமை யோர்;சபை யாளர்
என்னவே பேசும் இப்பரத நூலே. (9)

*இரசிகர், மனமாசற்றவர், நடுநிலையிலுள்ளவர், மேன்மை, சாவதானம் உடையோர், நடனக் குற்றங்களைப் பொறுத்து நீதியைக் கூறுபவர், பாவாபாவம் உணரும் சாமர்த்தியம், நல்ல குணம், தைரியம், வினயமுடையவர், மதமாச்சரியம், துர்வாதம், தீய நினைப்பு இவை இல்லாதவர், உபகாரசித்தம், பேச்சுத் திறம், பொறுமை இவற்றை உடையோர், இவை சபையினரின் இலக்ஷணமாகும்.*

### சபையில் பாத்திரமிருக்கும் இலக்ஷணம்

அரிதாம் சபைத்தலைவன் எதிரில் பாத்திரம்நிற்
றல்,அவள் வலப்புறம் மத்தளம்,
அவனருகில் சங்ககா கள,வாத்யக் காரன்,
அன்னவன் இடப்பு றத்தில்
திரமுள்ள காயகன், அவன்பின் சுதிக்காரன்,
சேர்ந்தருகில் லாஸ்யக் காரன்,
சீர்பெறும் பாத்திரத் தின்பின்னர் நட்டுவன்
தேனெனும் பரத சரணி
தெரிவித்து நிற்பன்;இச் செயலுடைய கானமும்
சீரான வாத்தி யங்களும்
செய்கின்ற நர்த்தனமும் அபிநயாதி களெல்லாம்
திறம்பெற விருந்து என்னும்

**பரிவுடன் கேட்டவர் புரிந்தவர்கள் சுமுகசம்**
**பத்து சந்ததி ஆயுளும்**
**பதமுடைய ஆரோக்கியம் அடைவர் எனவே, முன்**
**பகர்ந்தனன் மதங்க முனியே.** (10)

*சபைத்தலைவன் எதிரில் பாத்திரமும், அவன் வலப்புறம் மத்தளம், அருகில் சங்க, காகள வாத்தியங்கள், இடப்புறம் காயகன், பின் சுருதிக்காரன், அவனருகில் லாஸ்யக்காரன், அவன் பின் பரதசரணியைத் தெரிவிக்கும் நட்டுவன் ஆகியோர் நிற்பர்.*

### சபை வணக்கம்

**வேதங்கள் கொம்புகளாய் மேலாகும் சாத்திரங்கள்**
**தாதுகள்வி ளங்குமலர்த் தாருகளாய்—நீதமுடன்**
**கற்றோரே தும்பிகளாய்க் கண்டசபா கற்பகத்தைப்**
**போற்றுவேன் என்பாய் புகழ்ந்து.** (11)

*வேதங்கள் கிளைகளாகவும், சாத்திரங்கள் மலர்களாகவும், கற்றோர்கள் தும்பிகளாகவும் அமைந்த சபா கற்பக விருக்ஷத்தைப் புகழ்ந்து வணங்குவேன்.*

### அரங்க பூமியைத் தொழுதல்

**அரிபத்தி யுண்டாக்கி யழகியரத்**
**தினப்பணிபூண் அகில மாதே!**
**பெருமிரத் தினந்தரும் தாயே! கூர்மம்**
**சேடன்முடி பெரிதாம் மேரு**
**மருவியதிக் கயங்கடனைப் பூண்டவளே!**
**ஐம்பூத மமைந்த மின்னே!**
**பொறுமை கொள்வாய் நடனத்தில் அடிநின்மேல்**
**படுங்குற்றம் போற்றி போற்றி.** (12)

*அரி பக்தி உண்டாக்கி, அழகிய இரத்தினப் பணிகள் பூணும் பூமாதேவியே! பெரிய இரத்தினங்களைத் தரும் தாயே! கூர்மம், ஆதிசேஷன் இவர்களின் முடியில் அமைந்தவளே! மேருவைத் தாங்குபவளே! திக்கஜங்களைக் கொண்டவளே! ஐம்பூதங்கள் அமைந்த மின்னே! பொறுமை கொள்வாய்; நடனத்தில் என் பாதங்கள் உன் மேற் படும் குற்றங்களைப் பொறுத்துப் பாதுகாப்பாய்; பாதுகாப்பாய்.*

### அரங்க தேவ ஸ்துதி

பரதகுல பாக்கியமே! பாவரசா னந்தத்து
உருவாய் எழுந்த ஒளியே!—மருவுசகன்
மோகனமே! இன்ப முதலே! அரங்கநிலை
ஆகவளர் அம்மைஎனை ஆள். (13)

*பரதகுல பாக்கியமே! பாவ ரஸ ஆனந்த உருவாய் எழுந்த ஒளியே! ஜகன்மோகனமே! இன்ப மூலமே! அரங்கமாக வளரும் அம்மையே! என்னை ஆள்வாயாக.*

### பாத்திர சொரூபம்

மருங்குக்குக் கீழ்அயனும், மால்தோள் அளவும்,
இருங்கணமே சென்னிஅளவு ஈசன்,—நெருங்குதனம்
வண்டணியும் பூங்குழலாள் வந்தாட வேஇருந்த
மண்டலமே லிங்கவடி வாம். (14)

*இடுப்புக்குக் கீழ் பிரமன்; தோள் வரையில் திருமால்; தலை ஈசன். இவ்வாறு அமைந்த மண்டலம்* லிங்க *வடிவு ஆம்.*

### பாத்திர லக்ஷணம்

மன்னர்முதல் மூன்றுகுலத் தொருத்தியாய்ச்
சிவந்தழகாய் வண்மை காட்டும்
அன்னமன்னாள், வேந்தன்அரி யாசனமுன்
னே,இரட்டி முழத்துக் கீழ்பால்
மன்னுமெழி னியைநீக்கி, மதிகலைபோல்,
மலர்பூத்த வஞ்சி போல,
மின்னுருண்ட கருமேகம் திறந்துவெளிப்
பட்டதென, விளங்கத் தோன்றல்; (15)

*மன்னர் முதல் மூன்று குலத்துதித்தவள்; சிவந்த நிறமும் அழகும் உள்ளவள்; அன்னம் போன்றவள்; இத்தகையவள் அரச சிம்மாசனத்தின் முன்னே பத்து முழம் விட்டு, கீழ்த் திசையில், திரையை நீக்கி, பூர்ணசந்திரன் போலவும், பூத்த வஞ்சிக்கொடி போலவும், கார்மேகம் திறந்து மின்னல் வெளிப் பட்டது போலவும் விளங்கத் தோன்றுவாள்.*

ஒத்தியதா ளச்சுருதி தவருத
சொல்லையொக் கடித்த பின்னர்,
கற்றகல்வி மறவாமல் சாஸ்திரவி
சாரணையிற் கருத்தைத் தாக்கிப்
பித்தொடுநோ யில்லாமல் சலியாமல்
மெலியாமல் பின்செல் லாமல்
பத்திசெய்து மதுரவா சகம்பகர்ந்து
சங்கீதப் பாடல் கற்றே; (16)

*அவள், ஒத்திய தாளச் சுருதி தவருத சொல்லை ஒக்க அடித்த பிறகு, தான் கற்ற கல்வி மறவாமல், சாஸ்திர விசார ணையில் கருத்தை ஊன்றி, பித்து, நோய், சலிப்பு, மெலிவு, பின் செல்லுதல், முதலிய குற்றங்கள் இல்லாமல், பக்தியுடன், மதுர வாசகம் பேசி, இசைப் பாடலைப் பாடுவாள்.*

மிகப்பருத்தல் மிகவிளைத்தல் மிகவுயர்ச்சி
மிகக்குறுகல் மேவா மெய்யும்,
தகுரூபம் யவ்வனம்உத் தமதனமும்,
அறிவுர கத்வம் சார,
சகலமனே கரங்கிரகித் தருள, சுரக்
கியானமும்வி சால நேத்ரம்
மிகுமவய வத்திஞெளிர் முகமலர்ச்சி
அஸ்தாங்க வின்யா சத்தாம்; (17)

*மேலும் அவள் மிகப் பருத்தல், மிக இளைத்தல், மிக உயரம், மிகக் குறுகல் இல்லாத உடலும், தக்க ரூபமும், உத்தம தனங்களும் பெற்று, அறிவு உரம் பெற்றவளாய், மனேகரம், தாள சுர ஞானம், விசால நேத்திரம், அவயவ அமைப்பு, முக மலர்ச்சி இவற்றை உடையவளாய், ஹஸ்த அங்க வின்யாசங் களை அறிந்தவளா யிருப்பாள்.*

ஏற்றகுச் சரர்,ம ராடர்,
இலாடர்,சௌ ராஷ்ட்ர மன்னர்
கோத்திர மிவற்றில் வந்து,
குறில்நெடில் இசைய றிந்து

காத்திர மனத்தை யோர்ந்து,
கபடமும் கோப மின்றி
நீத்தநன் மறையோர் தெய்வம்
குருவின்மேல் நேசம் வைத்தாள்; (18)

*குர்ஜ்ஜர, மராட, விலாட, சௌராஷ்டிர மன்னர்களின் கோத்திரத்தில் பிறந்தவளாய், குறில் நெடில் இவற்றின் இசையை அறிந்தவளாய், பிறருடைய மனத்தை அறியும் சக்தி பெற்றவளாய், தான் கபடமும் கோபமுமில்லாமல், துறவிகள், தெய்வம், குருக்கள் இவர்களிடம் பக்திகொண்டவளா யிருப்பாள்.*

மண்டலத் தான நிர்த்தம் வாத்தியங் கீதங் தாளம்
மண்டிட அநுச ரித்தல், அணிவதுத் தமமாம் பணிகள்,
எண்டிசை புகழு மாதே! இவ்விலக் கணங்கள் உள்ளாள்
பண்டிதர் மெய்க்கும் நிர்த்தப் பாத்திர மென்ன லாமே. (19)

*மண்டலம், தானம், நிர்த்தம், வாத்தியம், கீதம், தாளம் இவற்றை அநுசரிக்கும் அறிவும் கொண்டு, உத்தம ஆபரணங்களையும் அவள் தரித்திருப்பாள்.*

### பாத்திரத்தின் பகிப்பிராணன்

நாதமுள மத்தளம், தா ளம், சீர்ங்
குழல், கானம் நவிலும் வீணை,
பேதமிலாச் சுதியுடனே, கிண்கிணியும்,
கீதமிகப் பெரிதாய் வாழும்,
சாதுவாம் நட்டுவனும், நிருத்தம்செய்
மாதருக்குத் தகைமை யாக
ஓதுபகிப் பிராணனென்னும்; மருப்பினைத்
திகழ்ந்ததன முடைய மாதே! (20)

*மத்தளம், தாளம், குழல், வீணை, சுருதி, கிண்கிணி, கீதம், நட்டுவன் ஆகியவை நர்த்தகியின் பகிப்பிராணன்களாம்.*

### பாத்திரத்தின் அந்தப்பிராணன்

திரமுளம், ரேகை, திஷ்டி, தேகம், ஆயாச மின்மை,
அருமையாம் சிரத்தை, புத்தி யடுத்தல், சாக்கிரதை, மேன்மை,

**தரமெனத் துலங்குமாம் இரசப் பிரதான வாக்கும்,**
**அரிவையர்க் கிவ்வீரைந்தும் அந்தப்பி ராணன் ஆமே. (21)**

*ஸ்திரமனம், இரேகை, திருஷ்டி, தேகம், ஆயாசமின்மை, சிரத்தை, புத்தி, சாக்கிரதை, மேன்மை, இரசப்பிரதான வாக்கு ஆகிய பத்தும் அந்தப் பிராணன்களாம்.*

குறிப்பு: *இரேகை என்பதற்கு, நாட்டிய காலத்தில் அங்கங்களின் ஒற்றுமை என்று பொருள் கொள்வார்.*

### அபாத்திர லக்ஷணம்

**பெருஞ்சென்னி செங்கண்ணி பேழ்வாய்ச்சி**
**கால்கைகள் பெரிதா மின்னுள்**
**மருவுளகர்ப் பிணி,பிணியாள் தடித்த மெய்யாள்**
**கொங்கையில்லாள் வதன மெய்யில்**
**பெருகியவேர்வை துடைத்தாள் கண்பிசைந்தாள்**
**தலைசொரிவாள் பின்னும் சோம்பி**
**உருநெளிப்பாள் வேந்தனுக்குப் பின்காட்டுவாள்**
**நடுங்கும் உடலை யுற்றுள்; (22)**

*பெரியதலை, செங்கண், பிளந்தவாய், பெரிய கால் கைகள், கர்ப்பம், நோய், தடித்த மெய், கொங்கையில்லாமை; முகத்தில் பெருகும் வியர்வை துடைத்தல், கண் பிசைதல், தலை சொரிதல், சோம்பி உரு நெளித்தல், அரசனுக்குப்பின் காட்டுதல், நடுங்கும் உடலைப் பெற்றிருத்தல்;*

**பூவுடைநேத் திரமுள்ளாள், கூந்தலில்லாள்,**
**முகத்திலம்மைப் புள்ளி யுள்ளாள்,**
**மேவுதனம் தொஞ்சலுள்ளாள், மிகப்பருத்தாள்,**
**மிகவிளைத்தாள், மிஞ்சு கூனுள்,**
**கோவமுள்ளாள், திடமில்லாள், ஒருகண்ணுள்,**
**வெள்ளுதடாள், குமரியி லாதாள்,**
**தாவுபனை யெனவுயர்ந்தாள், மிகக்குறுகல்,**
**ஈனசுரம், தளர்ந்த மெய்யாள்; (23)**

*பூவிழுந்தகண், கூந்தலின்மை, அம்மைவடுவுள்ள முகம், தொஞ்சியதனம், மிகப் பருத்திருத்தல், மிக இளைத்திருத்தல்,*

*அதிகம் கூனல், கோபம், திடமின்மை, ஒருகண்ணுடைமை, வெள்ளுதடு, மிக இளமை, பனைபோன்ற உயரம், மிகக்குறுகல், ஈனசுரம், தளர்ந்தமெய் ;*

**மாறுகண்ணாள், முழிகண்ணாள், குழிக்கண்ணாள்,**
**நீர்க்கண்ணாள், மாலைக் கண்ணாள்,**
**கூறியசொற் பொருளறியாள், குறிப்பறியாள்,**
**பொறுமையில்லாள், குருவின் சொல்லை**
**மீறியநடக் கையுள்ளாள், வாத்தியகா**
**ன,நிர்த்த விதத்தைக் காணாள்,**
**காறுநிறம், செவிடுமுளாள், கண்டமுகம்**
**நீட்சியுள்ளாள், கல்வி யில்லாள் ; (24)**

*மாறுகண், முழிக்கண், குழிக்கண், நீர்க்கண், மாலைக்கண் முதலான கண் குற்றங்களுடைமை, சொற்பொருள் அறியாமை, குறிப்பறியாமை, பொறுமையின்மை, குருவின் சொல் மீறிய நடக்கையுடைமை, வாத்தியம் கானம் நிருத்தம் இவற்றின் விதங்களை அறியாமை, கருப்புநிறம், செவிடு, கழுத்து நீளம், முகநீளம் ஆகியவற்றை உடைமை, கல்வியில்லாமை ஆகியவையும்,*

**தார்குழலைச் சபைமுன்னே கோதிமுடிப்**
**பாள் ; மெய்யைத் தான்,சொரிந்தும்**
**ஈர்நாக்கு தனைக்கொண்டு இதழ்தடவு**
**வாள்;உதட்டை மிகக்க டிப்பாள் ;**
**பார்மூக்கைத் தடவுவாள் ; இருகுரலாள் ;**
**ஆடுமப்போ பாரில் வீழ்ந்த**
**நேர்கலனை ஆராய்வாள் ; இவளை அபாத்**
**திரமெனவே விள்ளும் நூலே. (25)**

*கூந்தலைச் சபைமுன்னே கோதிமுடித்தல், உடலைச் சொரிதல், ஈரநாக்கினால் உதடுகளைத் தடவுதல், உதட்டைக் கடித்தல், மூக்கைத் தடவுதல், இருகுரலுடைமை, தரையில் விழுந்த ஆபரணத்தைத் தேடல் ஆகியவை கொண்டவள் அபாத்திரமாவாள்.*

### கிண்கிணி லக்ஷணம்

வெண்கலஞ் செம்பு மற்ற வெள்ளியிம் மூன்றி லொன்ருல்
பங்கிய நற்சு ரங்கள் பலுகவே அழகாய்ச் செய்த
கிண்கிணி தனக்குத் தாரா கணம்அதி தெய்வ மாங்,க
ருங்கயி றதனிற் கோத்திட் டுறுதியாய் முடிச்சைப் போடே. (26)

*வெண்கலம், செம்பு, வெள்ளி இம்மூன்றனுள் ஒன்ருல் கிண்கிணி செய்யப்படும். இதற்கு அதிதெய்வம் தாராகணம். அதனைக் கருப்புக் கயிற்றில் கோத்து உறுதியாய் முடிப்புப் போடவேண்டும்.*

கருதுமக் கெச்சந் தன்னைக் காற்குஇரு நூறு வீதம்
பெருகவே அணிவாய்; அல்லால் வலக்காலில் நூறு பூட்டி,
மருவிய இடக்கால் தன்னில் இருநூறு மாகக் கட்டி,
அருமையாய் நடனஞ் செய்தல் ஆமெனப் பகரு மாதோ. (27)

*காலொன்றுக்கு இருநூறு வீதம் கச்சை கட்டி அணிவது நல்லது. அல்லது, வலக்காலில் நூறும், இடக்காலில் இருநூறுமாகக் கட்டி ஆடலாம்.*

## 4. நாட்டியக் கிரமம்

### பூஜை

முந்தவே கணபதிக்கு முரசுடன்நை
வேத்தியம் முழங்கி, வானம்
சிந்தைமகிழ் பூமிக்கும் அவ்வவ்வாத்
தியமுழங்கி, சிந்தை செய்து,
அந்தமிகுங் குருமொழியை மனங்கொண்டு,
சுகம்பெறவே ஆலா பித்து,
பந்தமுறப் பாடுவது பரம்பொருளுக்
கேற்குமெனப் பகரும் நூலே. (28)

*முதலில் கணபதிக்கு முரச வாத்தியத்துடன் பூஜை நைவேத்தியங்கள் செய்து, ஆகாசத்திற்கும் பூமிக்கும் அந்த அந்த வாத்தியங்களை முழக்கி, தியானித்து, குருமொழியை மனங்கொண்டு, ஆலாபனம் செய்து, கட்டுப்பாட்டுடன் பாடுவது பரம்பொருளுக்கு ஏற்கும்.*

### நாட்டிய ஆரம்ப அந்திய வந்தனம்

இரண்டுகை இடுப்பில் வைத்துடன் நிமிர்ந்து
  இரண்டுதாள் சேரவே நின்று
இரண்டுகை சிகர மாக்கியே மார்பில்
  இயற்கையாய் நிறுத்திக்கால் இரண்டும்
உரம்பெறத் தட்டிப் பின்னொரு கையை
  டோளமாய்ப் பூமியைத் தொட்டுத்
திரங்கொள நிமிர்ந்து வணங்கல் நாட்டியத்திற்
  செயுமாதி யந்தியவந் தனமே. (29)

*இரண்டு கைகளை இடுப்பில் வைத்து, உடனே நிமிர்ந்து, இரண்டு பாதங்களும் ஒரு சேர நின்று, இரண்டு கைகளையும் சிகரக் கைகளாக்கி மார்பில் இயற்கையாய் நிறுத்தி, கால்கள் இரண்டையும் உரமாகத் தட்டி, பிறகு ஒரு கையை டோள மாய்ப் பூமியைத் தொட்டு, நன்ருக நிமிர்ந்து வணங்கல், நாட்டி யத்தில் ஆதியிலும் அந்தியிலும் செய்யும் வந்தனங்களாகும்,*

### நாட்டிய ஸ்தலங்கள்

நாட்டிய மென்னு மிந்த நற்ருெழில் தன்னை நேர்ந்து
ஈட்டம தாகச் செய்யும் இடமது விளம்பும் காலே,
கூட்டமாம் மறையோர் இல்லம் குடிபுகு மிடத்தி னும்,பேர்
நாட்டுமா சற்ற சோதி வழங்கு மிடத்தும் நண்ணே ; (30)

சுகசோப னத்தி லும்,பேர் சுதன்பெறு சங்கி லும்,சீர்
மகதேவர் கொலுவி லும்,தார் மன்னர்தம் கொலுக்கூ டத்தும்,
அகமகிழ் திருநாள் தன்னில், அபிடேகம் செயுமி டத்தும்,
மகிமைசேர் மகுடம் சூட்டும் மன்னர்க ளிடத்தும் பாரே ; (31)

தேவர்கள் பொருந்தி டும்யாத்திரைசெய்யு மிடத்தும், கையால்
பூவையர்க் குகந்து மங்கி லியம்பூட்டு மிடத்தும், விந்தை
மேவுபட் டணம்கி ரகப்ர வேசமா கியவி டத்தும்,
தாவிய ருதுவாங் கன்னி ருதுசாந்தி தலத்து மென்னே ; (32)

மறையோர்கள் புசித்த பின்னும், மண்டபந் தனிலும் என்றும்
குறைவில்லா தே,யா கங்கள் கூடிய விடத்தே, மிக்கப்
பொருவிலாப் புண்ய காலம் பொருந்துமவ் வேளை தன்னும்
அறமுணர் வேந்தர் செய்யும் யாத்திரை தனிலு மென்னே.(33)

*அக்கிரகாரங்கள், பிற குற்ற மற்ற இடங்கள், சுபசோபன இடங்கள், பிள்ளைப்பெறு இடங்கள், மகாதேவர்கொலு, மன்னர் கொலு, திருநாட்கள், அபிஷேக இடங்கள், பட்டாபிஷேக இடம், யாத்திரைசெய்யும் திவ்யதேசங்கள், மாங்கலியதாரண இடங்கள், கிரகப்பிரவேச சமயம், ருதுசாந்தி முகூர்த்தம், பிராமண போஜனத்துக்குப்பின், யாகசாலை, புண்யகாலம், அரசர்களின் யுத்தயாத்திரை சமயங்கள் ஆகியவை நாட்டியத்திற்கு உரிய சமயங்களும் இடங்களும் ஆகும்.*

## 5. நடன பேதங்கள்

### நாட்டியம், நிருத்தம், நிர்த்தியம்

நாட்டியம் நிருத்தம் நிர்த்தியம் நவிலுமூ விதமாம் ;
பூட்டிய நாட கத்தில் பூருவ கதைக டன்னைக்
காட்டியே அபிந யித்தற் காமெனப் பரத நூலோர்
வாட்டமில் லாமற் சொன்ன வகையிதை யறிந்து கொள்ளே. (34)

நிருத்தமாம் ரசபா வத்தை நீக்கிய அடைவி ஞலே
பொருத்த,வின் யாசம், தாள லயந்தனைப் பொருந்தக் காட்டல்;
நிருத்தியம் ரசபா வங்கள் நேர்கூட்டி விநியோ கித்தல் ;
திருத்தம தாகு மென்று செப்புமிம் மூன்றுஞ் சேர்ந்தே. (35)

*நாட்டியம், நிருத்தம், நிர்த்தியம் என்று இது மூன்று விதமாகும்.* நாடகம் *என்பதில்* (நாட்டியத்தில்) *பழமையான கதைகள் காட்டி அபிநயிக்கப்படும் ;* நிருத்தம் *என்பது (ரஸ, பாவங்களை நீக்கிப்) பொருத்தப்பட்ட விங்யாஸம், தாளம், லயம் ஆகியவற்றைப் பொருத்திக் காட்டல் ;* நிர்த்தியம் *என்பது ரஸபாவங்களைக் கூட்டி அபிநயித்தல்.*

## 6. திரியாங்கம்

### (1) அங்கங்கள்

காட்டிய திரியாங் கத்தின் தொகைபேதங் காண, முன்னம்
தேட்டமாம் ஒவ்வொன் றிற்கே சேரவ யவங்கள் சொல்லும்;
நாட்டமா மங்கத் திற்கு நவில்சிரம், விரல்,கை, மார்பு,
கூட்டிடை, பக்கம், பாதம், ஏழெனப் பிரித்து நூலே. (36)

*அங்கம், பிரத்தியாங்கம், உபாங்கம் என்பவை* **திரியாங்கம்** *எனப்படும்.* **அங்கங்கள்** *தலை, விரல், கை, மார்பு, இடை, பக்கம், பாதம் என்ற ஏழு.*

### (2) பிரத்தியாங்கங்கள்

**கூறுமே பிரத்தி யாங்கங் குறிப்பதாம்; புயம்,க ழுத்து,**
**தேறிய வயிறு, மணிக்கட்டு, இருதுடை, முழந்தாள், செப்பு**
**மாறுகேள், கணைக்கா லோடு, முதுகின்பா கத்தைச் சேர்த்து,**
**கோரிய பூஷ ணுதி கூட்டிய தொன்பான் பாரே. (37)**

**பிரத்தியாங்கங்கள்:** *புயம், கழுத்து, வயிறு, மணிக்கட்டு, துடைகள், முழந்தாள், கணைக்கால், இவற்றோடு முதுகையும் பூஷணுதிகளையும் கூட்டி ஒன்பது என்பார்கள்.*

### (3) உபாங்கங்கள்

**மேன்மையாம் உபாங்கந் தன்னை விளம்புமே; விழி,க போலம்,**
**தானிமை, புருவத் தோடு, நாசியும், சுவாசம், தந்தம்,**
**தேன்பயில் அதரம், நாக்கு, மோவாயும், சோதி சேர்ந்த**
**வான்பயில் அரி,நே ரான வதனத்தோடு, ஈரா றென்றே. (38)**

**உபாங்கங்கள்:** *விழி, கபோலம், இமை, புருவம், நாசி, சுவாசம், பல், உதடு, நாக்கு, மோவாய், அரி (?), வதனம் ஆகிய பன்னிரண்டென்று கூறுவர்.*

குறிப்பு: *பிறநூல்களில் இவற்றின் எண்ணிக்கைகளும் விவரங்களும் மாறிக் காண்கின்றன.*

*பிரத்தியாங்கங்கள் புயம் முதல் கணைக்கால் வரையிலுள்ள ஆறே என்று கூறுவார் கருத்தைக் காட்ட 'ஓடு' என்றது கொடுத்துப் பிரிக்கப் பெற்றது.*

*உபாங்கங்கள் எல்லாம் தலைப்பகுதியில் உள்ளன என்பது காண்க.*

## 7. அபிநயம்

**உரைத்திட்ட நாட்டியந்தான் உயர்அதி ரசசிங் காரம்**
**இருத்திட்ட தாம்;அதில் தெளிந்தநர்த் தனம்அ னேகம்;**
**விரித்திட்ட நர்த்த னந்தான் அபிநய மெனவிளம்பும்;**
**குறித்திட்ட அபிநயங்கள் ஆவது கூறக் கேளே. (39)**

**நாட்டியம்,** *ரசங்களுள் உயர்ந்ததான சிங்கார ரசம் பொருந்தியதாகும். நாட்டியத்துள் அமைந்த நர்த்தனங்கள் அநேகம்.*

**ந்ர்த்தனம்** *என்பது* **அபிநயம்.** *இனி அபிநயங்களைப் பற்றிக் கூறுவோம்.*

**கூறக்கேள் பிறந்த கீதப் பிரபந்தங்க ளின்கு றிப்பின்**
**சாரத்தைச் சபையோர்க் கெல்லாந் தருணம கிழ்ச்சி யாகப்**
**பேரொத்த பாத்தி ரந்தான் பிரியமாய் அபிந யித்துச்**
**சீரொத்துக் காட்டு கின்ற செழிப்பபி நயம தாமே.** (40)

*தோன்றிய கீதப் பிரபந்தங்களின் குறிப்பின் சாரத்தைச் சபையோர்க்கெல்லாம் பார்க்கும் போதே மகிழ்ச்சி யுண்டாகும் படி, பாத்திரமானவள் பிரியத்துடன் தாளத்துக்கு ஒத்தபடி அபிநயித்துக் காட்டும் சிறப்பே* **அபிநயம் ஆகும்.**

குறிப்பு: *அபிநயம் - முன்னே செலுத்துவது. 'நாடகத்தின் பிரயோகத்தை அதன் பொருள் விளங்குவதற்காகத் தூக்கிச் செல்வது அபிநயம்' (நாட்டிய சாஸ்திரம்).*

## நான்குவித அபிநயம்

**ஆமபி நயங்கள் நான்காம்; அதன்வகை ஏதென் றேதில்,**
**சேமம்,ஆங் கீக மென்றும், செப்பு,வா சீக மென்றும்,**
**பூமதுஆ காரிய மென்றும், பொருந்து,சாத் வீக மென்றும்,**
**நாமங்க ளென்று வேறுய் நவின்றது நூலின் பாங்கே.** (41)

*அவ்வபிநயங்கள் நான்கு வகைப்படும். அவை,* **ஆங்கிகம், வாசிகம், ஆகாரியம், சாத்விகம்** *என்பனவாம்.*

**பாங்காகும் அபிந யத்தின் பான்மையாய் விளங்கும் அந்த**
**ஆங்கீகம் அதுவே சாயி; அமைத்தவா சிகம்சஞ் சாயி;**
**ஓங்கும்ஆ காரி யந்தான் உயர்அனு சாயி, ஆகும்;**
**சாங்கமாம் சாத்வி கந்தான் விபசாயி எனவே சாற்றும்.** (42)

*இவ்வபிநயங்களுள் ஆங்கிகம்* **சாயி** *என்றும், வாசிகம்* **சஞ்சாயி** *என்றும், ஆகாரியம்* **அநுசாயி** *என்றும், சாத்விகம்* **விபசாயி** *என்றும் கூறப்படும்.*

**சாற்றும்ஆங் கீக மென்ற சரீரத்தின் அபிந யங்கள்;**
**ஏற்றிடுவாசி கந்தான் வாக்கபி நயமென் றேற்கும்;**
**தோற்றுமா காரி யந்தான் அலங்காரம்; சாத்வீ கஞ்சொல்**
**தேற்றமா நடன பாவ லயம்அபி நயமாம் சாற்றும்.** (43)

*ஆங்கிகம்,* **சரீரத்தால்** *செய்யப்படும்; வாசிகம்,* **வாக்கினுல்** *செய்யப்படும்; ஆகாரியம்,* **அலங்காரங்கள்;** *சாத்விகம்,* **நடன பாவம், லயம்** *ஆகியவை.*

### ஆங்கிகாபிநயத்தின் விளக்கம்

**ஆங்கிகா அபிநயம் ஈரா ருகும்; பேதம் கேளாய்;**
**பாங்கதாம் அங்க காரம், சிரோபேதம், பாத சாரி,**
**தாங்குதாண் டவத்தி ேனுடே, தானப் பிரமணம் சேர்ந்து**
**தீங்கிலாக் கரணம், அஸ்தம், நேத்திர பேதம் மற்றும்; (44)**

*ஆங்கிகாபிநயம் பன்னிரண்டு; அவை,* **அங்ககாரம், சிரோ பேதம், பாதசாரி, தாண்டவம், தானப் பிரமணம், கரணம், அஸ்தம், நேத்திரபேதம்.**

**ஓதுமே பேதம் இன்னும்; உருசர சக்தி யோடே**
**மாதுடை சப்த நாட்யம், மண்டல மாகும்; பின்னும்**
**தீதிலாப் பேத மாகும்; தேசிக கதியா மென்னும்**
**பேதத்தில் ஆங்கி கம்நான் காம்விதம் பேசும் பாரே. (45)**

**ஆனசூ சிகம தென்றும், பாவாபி நயமி தென்றும்,**
**ஞானஞ்சேர் தொந்த மென்றும், லாட்சணி கமதா மென்றும்**
**தேனுறு மொழியி னுளே! செப்புமிவ் வகையாம் நாலில்**
**பூணவே முதலிற் சூசி கத்திற்குப் புகலு நூலே. (46)**

**உருசரசக்தி, சப்தம், நாட்டியம், மண்டலம்** *என்றவை.*

*தேசிக கதி என்ற பேதத்தில், ஆங்கிகாபிநயம் நான்கு வித மாகவும் பேசப்படும். அவை,* **சூசிகம், பாவாபிநயம், தொந்தம், லாட்சணிகம்** *என்பன.*

*இனி, சூசிகம் கூறுவோம்.*

### சூசிகாபிநயம்

**சாருமே சூசி கந்தான் தாவர சங்க மத்தில்**
**பேருறும் எவற்றை யேனும் பிசகாமல் கைகால் தன்னுல்**
**நேரதா யபிந யித்து நிச்சய மாகக் காட்டித்**
**தேரிய வாக்கி னுலே சொல்லிக்காட் டுவதாய்ச் செப்பே. (47)**

**சூசிகம்** *என்பது, தாவர ஜங்கமங்களில் எவற்றையேனும் கைகளாலும் கால்களாலும் அபிநயித்து,* **வாக்கினுல் சொல் லிக்** *காட்டுதல்.*

### பாவாபிநயம் : தொந்தாபிநயம்

பாவாபி நயமே யாகும் தலைகண்ணுற் பாவம் காட்டும் ;
நீவிய தொந்தம் சென்னி நேத்திரம் பாதம் கையால்
யாவரும் தெரியக் காட்ட லாம் ;அதன் விதங்கள் மூன்று ;
ஆவாக்யம், பாவி கத்தோ டனுபாவிக தொந்த மென்றே. (48)

பாவாபிநயம் *என்பது தலையாலும் கண்களாலும் பாவங்களைக் காட்டுதல்.*

தொந்தாபிநயம் *என்பது தலை, கண், பாதம், கை ஆகியவற்றால் காட்டுவது. இந்த அபிநயம் மூன்று வகைப்படும் ; அவை :* ஆவாக்ய தொந்தாபிநயம், பாவிக தொந்தாபிநயம், அநுபாவிக தொந்தாபிநயம் *என்பனவாம். அவை வருமாறு :*

### ஆவாக்ய தொந்தாபிநயம்

சொல்லுமா வாக்கி யத்துத் தொந்தமாம் பாட கன்தான்
மெல்லவே பாடும் போது மெல்லியர் உசித மாகச்
சில்லெனப் புளகங் கொள்ளத் திறமாக நடிப்ப தென்றே
வில்லெனும் புருவ மாதே ! விண்டனர் நூல்வல் லோரே. (49)

ஆவாக்கிய தொந்தாபிநயம் *என்பது, பாடகன் மெதுவாகப் பாட, நடிகை உசிதமாகவும், ஜில்லெனப் புளகாங்கிதம் கொள்ளும் படியும், திறமையாக நடிப்பது.*

### பாவிகதொந்தாபிநயம்

பாவிக தொந்த மென்னப் படுவது சென்னி யும்,கண்
மேவுமற் றெதனு லேனும் மெல்லியர் பாடிக் கொண்டு
பாவலர் மகிழ ஆடும் பயனென ஓதும் நூலில் ;
கூவிளங் கனியை யொத்துக் குவிந்தநல் தனத்தி னளே ! (50)

பாவிக தொந்தாபிநயம் *என்பது, நடிகையரே பாடிக்கொண்டு, தலையாலும் கண்ணாலும் வேறு எதனாலும் அபிநயித்துக் கவிஞர் மகிழ ஆடுவது.*

*தனத்தினளே ! விளி.*

### இலாட்சணிகாபிநயம்

இயல்புலாட் சணிக மாவ தேதெனில், உலகி லுள்ள
சுயமதாம் வஸ்து நாமம் சொல்லாமல் இதுதா னென்று
பயனதை யாரும் கண்டு பாவனை கொள்வ தாக
நியமமாம் உருவம் காட்டி நேர்பிடித் திடலா மென்னே. (51)

இலாட்சணிகாபிநயம் *என்பது, இயற்கைப் பொருள்களின் பெயர்களைக் கூறுமல், யாவரும் பார்த்துப் பாவிக்கும்படி, உரு வங்களைக் காட்டிப் பிடித்தல்.*

### சுத்தலாட்சிணிகாபிநயம்

சுத்தலாட் சணிக மேலே சொல்லும்வஸ் துக்க ளுக்கு
வைத்திடு நாமம் சொல்லி வளம்படப் பிடித்துக் காட்டல் ;
நித்தம தாகு மென்று நேர்படப் பரத நூலோர்
வித்தக மொழியி னளே! விண்டனர் கண்டு தேறே. (52)

சுத்தலாட்சணிகாபிநயம், *வஸ்துக்களின் பெயர்களைச் சொல்லி அபிநயித்தல்.*

*மொழியினளே ! விளி.*

### வாசிகாபிநயம்

#### (1) சுகீதவாசிகம்

ஓது,சு கீத வாசிகம், உபகீத வாசிக மும்,சேர்ந்
தோது,சு சப்த வாசிகம், உபசப்த வாசி கம்,என்
றீதில்,சு கீத வாசிக மாகும் இனிதாம் பாத்திரம்
கீதத்தைத் தானே பாடிக் கொண்டபி நயித்தற் கென்னே. (53)

வாசிகாபிநயம் *நான்கு வகைப்படும். அவை,* சுகீதவாசிகம், உபகீதவாசிகம், சுசப்தவாசிகம், உபசப்தவாசிகம் *என்பனவாம்.*

*(1)* சுகீதவாசிகாபிநயம் *பாத்திரம் கீதத்தைத் தானே பாடிக் கொண்டு அபிநயித்தல்.*

#### (2) உபகீதவாசிகம் (3) சுசப்தவாசிகம்

உபகீத வாசி கந்தான் ஓதுமே பாட கன்தான்
சபைமெச்சப் பாடும் போது தையலர் அபிந யித்தல் ;
விபுலமாம் சுசப்த வாசிகம் மெல்லியர் கணிப்பித் தேதான்
சுபமதாய் நடனம் செய்வ தாமெனச் சொல்லு நூலே. (54)

*(2)* உபகீதவாசிகம், *பாடகன் பாடத் தையலர் அபிநயித்தல்.*

*(3)* சுசப்தவாசிகம், *அவள் கணிப்பித்துக்கொண்டே நடனம் செய்தல்.*

### (4) உபசப்தவாசிகாபிநயம்

வருமுப சப்த வாசிக மாவது நட்டு வன்றன்
திறமதாய்க் கணிப்பப் பாத்ரம் ஆடியே அபிந யித்தல்
தருமெனப் பரத நூலோர் தரணியி லறிய முன்னுள்
மருவிய முலையி னளே! வகுத்தனர் அறிந்து கூறே. (55)

(4) உபசப்தவாசிகம், *நட்டுவன் கணிக்கப் பாத்திரம் ஆடல்.*

## ஆகாரியாபிநயம்

### (1) நிஜாகாரியாபிநயம்

ஆகாரி யபிந யந்தான் அங்கதம், முடியும், மார்ப
டாகையாம், தட்டிச் சல்ல டம்,முலைக் கச்சு, மற்றும்
வாகுள அரைஞாண் என்னும் திகழ்பணி சிறக்க ஆடற்
காகுமே இதற்குச் சொல்லும் நிஜாகாரியம் என்னும் பேரே.
(56)

ஆகாரியாபிநய *வகைகள் மூன்று. அவை:*

(1) நிஜாகாரியாபிநயம்: *அங்கதம் (வாகுவலயம்), முடி, மார்புப் படாகை, தட்டிச் சல்லடம், முலைக்கச்சு, அரைஞாண் என்ற அணிகளுடன் ஆடுவது.*

### (2) அபிசாரி ஆகாரியம்

இதில்,அபி சாரி யென்னும் ஆகாரிய இலக்க ணம்தான்
மதியெனத் துலங்கும் ஓரிரா மாயண நாட கங்கள்
முதலான தற்கு வேடம் பூண்டாடு வதென மூட்டும்
கதிரெனு மொழியி னளே! கருதுமிங் நூலிற் றனே. (57)

(2) அபிசாரி ஆகாரியம்: *இராமாயணம் (போன்ற) நாடகங்களுக்கு ஏற்ற வேடங்கள் பூண்டு நடிப்பது.*

### (3) விபசாரி ஆகாரியம்

விபசாரி அபிந யந்தான் விள்ளுமங் தந்தத் தேசச்
சபைகொளப் பலவாம் நாட்டி யங்கட்குச் சாதி நேராய்
உபமானத் தோடே ராமா யணமுதல் நாட கங்கள்
உபயோகப் படவே காட்டற் குற்றபூ ஷணங்க ளென்னே. (58)

(3) **விபசாரி ஆகாரியம் :** *அந்த அந்த நாட்டுச் சபையோர் ஏற்றுக்கொள்ளும்படி, பலவகை நாட்டியங்களுக்கு ஒத்த சாதி, உபமானங்கள் ஆகியவை ஒத்து அமையும்படி இராமாயணம் முதலான நாடகங்களை நடித்துக் காட்டுவதற்கு ஏற்ற பூஷணங்களை அணிந்து ஆடுவது.*

### சாத்விகாபிநயம்

**சாத்விக அபிநயம் சாட்சு ஷிய,வியஞ் சகம தென்று**
**போற்றிடும் இருவி தத்தில், எண்ணும் சாட் சுஷந்த னக்குப்**
**பாத்திரம் கண்ணி னுல பிநயித்தல் ; வியஞ்ச கந்தான்**
**நேத்திரம் தலைக ளாலே நேரபி நயிப்ப தாமே.** (59)

**சாத்விகாபிநயம்** *இருவகைப்படும் : அவை* **சாட்சுஷிய சாத்விகம் : வியஞ்சக சாத்விகம்** *என்பன.* **சாட்சுஷியம் :** *பாத்திரம் கண்களைக் கொண்டு அபிநயித்தல் ;* **வியஞ்சகம்** *கண், தலை இவற்றினுல் அபிநயித்தல்.*

## 8. தாண்டவம், லாஸ்யம்

**தாண்டவ லாஸ்ய மென்ன விருவகை யாகச் சாற்றும்**
**தாண்டவங் தனிலுத் தான தாண்டவ மெனவோர் கூறும்**
**தூண்டிய லாசி யத்தில் சுகுமார லாசிய மென்றும்**
**ஈண்டறி தற்காய்ச் சொன்ன விவரத்தை யறிந்து கொள்ளே** (60)

**நிரையுமுத் தான தாண்ட வமதாநின் றபிந யித்தல்**
**உரைசுகு மார லாசிய முட்கார்ந் தபிந யித்தல்**
**முறையாகு மென்று ரைத்தார் மூதறி வுடைய மேலோர்**
**திரைகொளு முததி தன்னிற் செழித்தசெங் கமல மாதே!** (61)

**தாண்டவம், லாஸ்யம்** *என்று இருவகையாகக் கூறப்படுவனவற்றுள் தாண்டவத்தில்* **உத்தான தாண்டவம்** *என்பது ஒரு கூறு. அது நின்று அபிநயித்தல் ஆகும் ; லாஸ்யத்தில்* **சுகுமாரலாசியம்** *என்பது ஒரு கூறு. அஃது உட்கார்ந்து அபிநயித்தல்.*

முற்சேர்பு முற்றும்

---

# அபிநயதர்ப்பணம்

## பாயிரம்

ஆதிநா தரைப்பண் பாடுவகுளக் குருகூர் நம்மாழ்வார்
பாதபங் கயம்ப ணிந்து பரதசாத் திரத்தின் முன்னோர்
ஓதிய வடமொ ழிச்சொ லுரையபி நயநன் னூலை
மேதகுந் தமிழாற் செய்தான் வீர ராகவையன் றானே.

*ஆதி நாதரான திருமாலைப் பண்களால் பாடுபவரும், குருகூர் என்ற ஆழ்வார் திருநகரியில் மகிழ மரத்தடியில் எழுந்தருளிய வருமான நம்மாழ்வாரின் திருவடிகளில் வணங்கி, முன்னோர் வடமொழியில் இயற்றிய பரத சாஸ்திரத்தின் அங்கமான அபிநய நூலைத் தமிழில் இயற்றியவன் வீரராகவையன் என்பவன்.*

*இதனால் ஆசிரியர் பெயரும், அவருடைய சமயமும், இந்நூலின் பெயரும், அதன் பொருளும், அஃது இன்ன நூலின் மொழிபெயர்ப்பு என்பதும் கூறப்பெற்றன.*

## நூல்

### 1. ஒன்பதுவகைச் சிரசுகள்

வருசம முகத்தோ டுத்துவாகித முகமே யென்ப
இருமதோ முகமே ஆலோ லிதமுகம் துதமுகம் தானே
பரவிருத் தம்கம் பிதம்சீர் படருமுட் சித்த மென்ப
பரிவாகி தத்தி னேடொன் பதுவகை சிரசு தானே. (1)

ஸமமுகம், உத்வாஹிதமுகம், அதோமுகம், ஆலோலிதமுகம், துதமுகம், கம்பித முகம், பராவிருத்த முகம், உத்க்ஷிப்த முகம், பரிவாஹித முகம் *என்று சிரசுகள் ஒன்பது வகைப்படும்.*

*சமம் – ஒரே நிலையானது; உத்வாஹிதம் – உயரத்தூக்கியது; அதோமுகம்–கீழ் நோக்கியது; ஆலோலிதம்–உருள்வது; துதம்–பக்கத்தில் அசைவது; கம்பிதம்–அசைவது; பராவிருத்தம் – திரும்பிப் பார்ப்பது; உத்க்ஷிப்தம் – மேலே தூக்கியது; பரிவாஹிதம்–தூர விலகியிருப்பது.*

குறிப்பு: *பராவிருத்த முகத்தை முன்னும், கம்பிதத்தைப் பின்னும் இப்பாடலிற் கொண்டது, பாட்டின் முறையை நோக்கியேயாகும்.*

## १. शिरोभेदाः

समसुद्वाहितमधोमुखमालोलितं धुतम् ॥
कम्पितं च परावृत्तमुत्क्षिप्तं परिवाहितम् ।
नवधा कथितं शीर्षं नाट्यशास्त्रविशारदैः ॥

### (1) ஸமம் (*ஒரே நிலையானது*)

அலையாமல் கீழ்பால் மேல்பால் அடர்பக் கங்களிற் சாயாது
நிலையான தலையின் நாமம் நிகழ்த்தினர் சமமே என்று;
மலையாமல் வினியோ கங்கள் வழுத்தவே கேளாய் மாதே
பலவான கரும ஆரம் பங்களுக் காகும் என்ப. (2)

அருளில ததற்கும் கூடும் ஆண்பெண்ணின் ஊட லுக்கும்
தகுசபா ரம்பத் துக்கும் தம்பனங் களுக்கும் என்ப;
வருகரு வங்க ளுக்கும் வழுத்தினர் சமமு கந்தான்
உரிமையாய்ப் பின்னோர் சென்னி உத்துவா கிதஞ் சொல்வாரே. (3)

**இலக்கணம்:** *கீழேயும் மேலேயும் அலையாமலும், பக்கங்களிற் சாயாமலும் நிலையாக (நேர்) நிறுத்தப்படும் தலைக்குச் சமம் என்பது பெயர்.*

**வினியோகம்:** *பலவிதமான (நிருத்தத்) தொழில்களின் ஆரம்பம்; அருளிலாத நிலைமை; பிரணய கோபம் (ஊடல்); சபையின் ஆரம்பம்; ஸ்தம்பித்திருத்தல்; கர்வங்கள்.*

குறிப்பு: *வேறு வினியோகங்கள்: ஜபம்; காரியமின்மை.*

### (१) समशिरः

निश्चलं सममाख्यातं यन्नत्युन्नतिवर्जितम् ।

विनियोगः

नृत्यारम्भे जपादौ च गर्वप्रणयकोपयोः ॥
स्तम्भने निष्क्रियत्वे च समशीर्षमुदाहृतम् ।

**(2) உத்வாஹிதம்** *(உயரத் தூக்கியது)*

உயரப் பார்த்திடும் முகந்தான் உத்துவா கிதமே யாகும்;
நயமுற்ற வினியோ கங்கேள்; நகங்கட்கும் துவசங் கட்கும்,
வியனுற் றிடும்விண் ணுக்கும் விண்ணிடைத் திரிவோ ருக்கும்
உயரக் கண்டிடு பொருட்கும் ஊருஞ் சந்திர னுக்குந் தானே. (4)

இலக்: *உயரப் பார்த்திடும் முகம்* உத்வாஹித *முகமாகும்.*

வினியோ: *மலைகள்; துவசஸ்தம்பங்கள்; (பெரிய) வானம்; வானத்தில் திரிவனவும், திரிபவர்களும் (நக்ஷத்திரங்கள்; சாரணர் முதலியன); உயரத்தில் காணும் பொருள்கள்; சந்திரன்.*

*நகம்–மலை; துவசம்–கொடி மரம்; வியன்–பெருமை; விண்ணிடைத் திரிவோர்–சாரணர் முதலியோரும், நக்ஷத்திரங்கள் கிரகங்கள் முதலியனவும் ஆகலாம். ஊரும் சந்திரன் – நகர்ந்து செல்லும் சந்திரன்.*

(२) उद्वाहितशिरः

उद्वाहितशिरो ज्ञेयमूर्ध्वभागोन्नताननम् ।

विनियोगः

ध्वजे चन्द्रे च गगने पर्वते व्योमगामिषु ।
तुङ्गवस्तुनि संयोज्यमुद्वाहितशिरो बुधैः ॥

**(3) அதோமுகம்** *(கீழ் நோக்கியது)*

**(4) ஆலோலிதம்** *(உருள்வது)*

பாருல கினைவ ணங்கிப் பார்த்து நின்றிடு முகத்தின்
பேர்அதோ முகம்இ தற்குப் பின்வினி யோகங் கேளாய்;
நேரில்துர்ப் புத்திக் கும்நன்னி லத்திடு பொருள்க ளுக்கும்
மாரன்வா ளிகள்செய் மோக மயக்கங்க ளுக்கும் என்ப. (5)

நாடிய லெச்சை கட்கும் நமக்காரஞ் செய்வ தற்கும்
நீடிய துக்கத் துக்கும் நீரினில் மூழ்கு தற்கும்
கூடும்அ தோமு கம்பின் கூறுமா லோலி தங்கேள்
ஆடியே வட்ட மாக அலைக்கவா லோலி தங்காண். (6)

பிரமைக்கும் விகடத் துக்கும் பேய்த்தலை சுற்று தற்கும்
அரியநித் திரைக்கும் கள்ள மாகிய சிரிப்பி னுக்கும்
தெரியுமே மயக்கத் துக்கும் தேகத்தின் மூர்ச்சைக் கும்முன்
உரிமையாய் மருவு மேஆ லோலிதச் சிரசு தானே. (7)

### (3) அதோமுகச் சிரசு

**இலக் :** *தலை பூமியைப் பார்த்து வணங்கி நிற்றல்.*

**விநியோ :** *நேர்மையற்ற துர்ப்புத்தி; பூமியில் இட்ட பொருள்கள்; மன்மத பாணங்களால் உண்டாகும் மோகம்; மயக்கங்கள்; லஜ்ஜை; நமஸ்காரம் செய்தல்; நீண்ட துக்கம்; நீரில் முழுகுதல்.*

*மாரன்–மன்மதன்; வாளி–அம்பு.*

### (4) ஆலோலிதச் சிரசு

**இலக் :** *வட்டமாக வளைத்தல்.*

**விநியோ :** *பிரமை; விகடம், (வேறுபாடு); பேயாட்டத்தில் தலை சுற்றல்; துக்கம்; கள்ளச் சிரிப்பு; மயக்கம்; மூர்ச்சித்தல்.*

### (३) अधोमुखशिर:

अधस्तान्नमितं वक्त्रमधोमुखमितीरितम् ।

विनियोग:

लज्जाखेदप्रणामेषु दुश्चिन्तामूर्च्छयोस्तथा ॥
अध:स्थितार्थनिर्देशे युज्यतेऽम्बुनि मज्जने ।

### (४) आलोलितशिर:

मण्डलाकारमुद्भ्रान्तमालोलितं शिरो भवेत् ॥

विनियोग:

निद्रोद्वेगग्रहावेशमदमूर्छासु तन्मतम् ।
भ्रमणे विकटोद्दामहास्ये चालोलितं शिर: ॥

**(5) துதம்** *(பக்கத்தில் அசைவது)*

அன்னமே இடம்வ லத்தில் அசைப்பது துதமு கந்தான்;
வின்னியோ கங்கேள்; பக்க மேவிஞேர் தமைய ழைக்கத்
துன்னிய புன்சிரிப்பு துக்கம் ஆதரவு கட்கும்
வன்னியின் எரிச்ச லுக்கும் வருகுளிர்ச் சிக்கு மென்ப. (8)

அடிக்கடி பக்கங் கள்பார்ப் பதற்கும் நிசித்தங் கட்கும்
திடத்தில்லே யென்ன வும்தன் தேகம் பார்ப்பதற் கும் கள்
குடிக்கிற போதும் யுத்தம் கோலிய போதும் ஆகும்
எடுத்த பிரியம் சந்தோ ஷமில்லா ததற்கும் தானே. (9)

இலக்: *சிரசை இடம் வலமாக அசைத்தல். (பின் வலம் இடமாகவும் அசைத்தல்).*

விநியோ: *பக்கத்தில் வருகிறவர்களே அழைக்கப் பொருந்திய புன்சிரிப்பு; துக்கம்; ஆதரவு; நெருப்பின் எரிச்சல்; குளிர்ச்சி; அடிக்கடி பக்கங்கள் பார்த்தல்; நிஷித்தங்கள்; திடமாக இல்லேயென்று சொல்லுதல்; தன்தேகம் பார்த்தல்; கள் குடிக்கிறபோது; போர் தொடங்குங்காலம்; பிரியம், சந்தோஷம் இல்லாமை.*

(५) धुतशिरः

वामदक्षिणभागेषु चलितं तद्धुतं शिरः ।

विनियोगः

नास्तीति वचने भूयः पार्श्वदेशावलोकने ॥
जनाश्वासे विस्मये च विषादेऽनीप्सिते तथा ।
शीतार्ते ज्वरिते भीते सद्यःपीतासवे तथा ॥
युद्धे यत्ने निषेधादावमर्षे स्वाङ्गवीक्षणे ।
पार्श्वाह्वाने च तस्योक्तः प्रयोगो भरतादिभिः ॥

**(6) கம்பிதம்** *(மேலும் கீழும் அசைவது)*

மேலும் கீழும் அசைத்த மெய்ச்சிகரம் கம்பி தம்காண்;
ஏலும் கோபங் கட்கும், இருக்கச் சொல்வ தற்கும்,
கோலும் கண்டனே கட்கும், கூர்ந்து என்னஎன்ப தற்கும்,
ஞாலந்தன் மீது ஆவா கனங்கட்கும், ஆகும் தானே. (10)

**இலக் :** *தலையை மேலும் கீழும் அசைத்தல்.*

**விநியோ :** *கோபங்கள் ; இருக்கச் (நிறுத்தச்) சொல்லுதல் ; கண்டனங்கள் ; அது என்ன என்று வினுதல் ; ஆவாகனங்கள்.*

### (६) कम्पितशिरः

ऊर्ध्वाधोभागचलितं तच्छिरः कम्पितं भवेत् ।

विनियोगः

रोषे तिष्ठेति वचने प्रश्ने संख्योपहूतयोः ॥
आवाहने तर्जने च कम्पितं विनियुज्यते ।

### (7) பராவ்ருத்தம் *(திரும்பிப் பார்ப்பது)*

**பராமு கமாயிருந் தால்பரா விருத்தச் சென்னி யாகும் ;**
**வராத கோபங் கட்கும் வதனத்தைத் திருப்பு தற்கும்**
**நிராதர வானதற்கும் லச்சை களுக்கும் ஆகும்**
**பராகஞ்சேர் கொண்டைதன்னைப் பார்க்கவு மாகும் தானே.**
(11)

**இலக் :** *பராமுகமாய் இருத்தல்.*

**விநியோ :** *அசாதாரணக் கோபங்கள் ; முகத்தைத் திருப்புதல் ; அநாதரவான தன்மை (அலக்ஷ்யம்) ; லஜ்ஜை ; கொண்டையைப் பார்த்தல்.*

*பராமுகம் – கவனிப்பின்மை ; வதனம் – முகம் ; நிராதரவு – ஆதரவற்றது ; பராகம்–வாசனைத்தூள் ; மகரந்தம்.*

### (७) परावृत्तशिरः

पराङ्मुखीकृतं शीर्षं परावृत्तमितारितम् ॥

विनियोगः

तत् कार्यं कोपलज्जादिकृते वक्त्रापसारणे ।
अनादरे कचे तूष्ण्यां परावृत्तशिरो भवेत् ॥

**(8) உத்க்ஷிப்த சிரசு** *(மேலே தூக்கப் பெற்றது)*

**ஒருபக்கத் துயரப் பார்ப்ப துத்க்ஷிப்த சிரமே யாகும்;**
**பொருள்யா தும்கொடு வாவெனப் போவென ஒப்புக் கொள்ள**
**அருமையாய்ச் சம்ஞ்ஞை செய்ய ஆதியாம் கருமங் கட்கும்**
**மருவிஆ தரிப்ப தற்கும் ஆகுமுத் க்ஷிப்தந் தானே. (12)**

**இலக்:** *ஒரு பக்கமாகச் சிரசைத் திருப்பிப் பின் அதனை உயர்த்துதல்.*

**விநியோ:** *ஏதேனும் ஒரு பொருளைக் கொண்டுவா என்றும் போவென்றும் சொல்லச் சமிஞ்ஞை செய்ய; ஆதியான கருமங்கள்; (ஏதேனும் ஒன்றை) ஆதரிக்க.*

*கொடுவா — கொண்டுவா. சமிஞ்ஞை — குறி. மருவி — பொருந்தி.*

குறிப்பு: *ஆதியாம் கருமங்களை ஆதரிக்க என்று கூட்டிப் பொருள் கொள்க.*

(८) उत्क्षिप्तशिरः

पार्श्वोर्ध्वभागचलितमुत्क्षिप्तं कथ्यते शिरः ।

विनियोगः

गृहाणागच्छेत्याद्यर्थसूचने परिपोषणे ॥
अङ्गीकारे प्रयोक्तव्यमुत्क्षिप्तं नाम शीर्षकम् ।

**(9) பரிவாஹிதம்** *(அகன்று வீசுதல்)*

**சாமரம் போடல் போலே தலைதன்னை இருபக் கத்தாங்**
**கேமகிழ்ந் தலைத்தாற் பரிவா கிதசிரம் விநியோ கங்கேள்**
**மாபோ கம்துதி சந்தோ ஷம்வரு விரக விசாரம்**
**மாமத லையின் சீராட்டு வகைகட்கும் ஆகுந் தானே. (13)**

**இலக்:** *சாமரம் வீசுதல் போலத் தலையை இருபக்கங்களிலும் மகிழ்ச்சியுடன் அலைத்தல்.*

**விநியோ:** *மோகம்; (கடவுள்) துதி; சந்தோஷம்; விரகம்; விசாரம்; குழந்தைகளைச் சீராட்டு வகைகள்.*

*மாமோகம்–பெரிய மோகம் ; விரகம்–பிரிவுத் துயரம் : விரக விசாரம் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். மா மதலை– சிறந்த பிள்ளை.*

(९) परिवाहितशिरः

पार्श्वयोश्चामरमिव ततं चेत् परिवाहितम् ॥

विनियोगः

मोहे च विरहे स्तोत्रे सन्तोषे चानुमोदने ।
विचारे च प्रयोक्तव्यं परिवाहितशीर्षकम् ॥

சிரசுவகை முற்றும்

---

*அப்பால் கண்களின் பேதஞ் சொல்கிறார் :*

## 2. எட்டு திருஷ்டி பேதங்கள்

சமமா லோகிதம் சாசி தாங்கிய ப்ராலோகிதம்
நிமீலி தம்தொல் லுலோகிதமே நீடனு விருத்த மென்ப
. . . வ லோகி தித்ததோ டட்ட திட்டிகளும் சொல்லி
. . . . . . . . . யதற்கு விநியோ கமும்சொல் வாரே. (14)

(*இப்பாடல் சிதைந்து காண்கிறது*).

*கண் பேதங்கள் எட்டு: அவை (1) ஸம திருஷ்டி, (2) ஆலோகித திருஷ்டி, (3) ஸாசி திருஷ்டி, (4) பிரலோகித திருஷ்டி, (5) நிமீலித திருஷ்டி, (6) உல்லோகித திருஷ்டி, (7) அநுவிருத்த திருஷ்டி, (8) அவலோகித திருஷ்டி என்பன வாம்.*

*திருஷ்டி – கண்.*

## २. दृष्टिभेदाः

सममालोकितं साची प्रालोकितनिमीलिते ।
उल्लोकितानुवृत्ते च तथा चैवावलोकितम् ॥
इत्यष्टौ दृष्टिभेदाः स्युः कीर्तिताः पूर्वसूरिभिः ।

### (1) சமம் (ஒத்த நிலை)

இமையவர் போலே கண்கள் இரண்டும் மூடாமற் பார்த்தல்
சமதிட்டி வினியோ கங்கேள் ; தராசுநல் நாட்டியா ரம்பம்
அமலவிண் தேவ ரூபம் ஆச்சரி யங்க ளுக்கும்
விமலியே! வேறோர் காரிய மேவு சிந்தைக்கும் ஆமே. (15)

**இலக் :** *தேவர்களைப் போல், கண்கள் இரண்டையும் மூடா மல் பார்த்தல்.*

**வினியோ :** *தராசு ; நாட்டியாரம்பம் ; தேவர் உருவங்கள் ; ஆச்சரியங்கள் ; அந்நியர் கருத்தை ஆராயும் மனம்.*

*அமல விண் தேவர்–மாசற்ற வானத் தேவர்கள் ; மாச்சரி யம்–பொறாமை ; விமலியே–விளி.*

குறிப்பு : *வேறோர் காரிய மேவு சிந்தை என்பதற்கு மற்றொரு காரி யத்தை நினைக்கும் மனம் என்றும் பொருள் கொள்ளலாம்.*

### (१) समदृष्टिः

वीक्षणं सुरनारीवत् सानन्दं समवीक्षणम् ॥

### विनियोगः

नाट्यारम्भे तुलायां चाप्यन्यचिन्ताविनिश्चये ।
आश्चर्ये देवतारूपे समदृष्टिरुदाहृता ॥

### (2) ஆலோகிதம் (சுழற்றிப் பார்த்தல்)

திகழ்சாடை யாய்ப்பிர மித்துத் திறத்துடன் சுழற்றிப் பார்த்தல்
பகருமா லோகி தக்கண் பற்றிய வினியோ கங்கேள் ;
சகலமும் பார்க்க வும்குய வன்திரி கைக்கும் இச்சை
மிகவா னதற்கும் சிந்தை மேவிய பிரமைக்கும் தானே. (16)

(பி–ம்.) *1. நிகழ்சாடை.*

**இலக் :** *சாடையாய்ப் பிரமித்துத் திறமையுடன் கண்களைச் சுழற்றிப் பார்த்தல்.*

**வினியோ :** *எல்லாவற்றையும் பார்த்தல் ; குயவன் திரிசக்க ரத் திரிபு ; இச்சையின் மிகுதி ; மனத்தைப் பற்றிய பிரமை.*

குறிப்பு : *திறந்த கண்களுடன் சடுதியில் பார்த்தல் ஆலோகிதக் கண் ணின் இலக்கணமென்று வடமொழிச் சுலோகம் கூறும். மூன்றும் வரியில் தமிழ்ச் செய்யுளில் உள்ள இச்சை என்ற சொல் பிச்சை என்றிருந்திருத் தல் கூடுமோ என்றும் தோன்றுகிறது.*

(२) आलोकितदृष्टिः

आलोकितं भवेदाशुभ्रमणं स्फुटवीक्षणम् ।

विनियोगः

कुलालचक्रभ्रमणे सर्ववस्तुप्रदर्शने ॥

याच्ञायां च प्रयोक्तव्यमालोकितनिरीक्षणम् ।

(3) ஸாசீ (*பக்கமாகப் பார்த்தல்*)

பாரிசங் களிற்கு றுக்கே பார்ப்பது சாசீ திட்டி;
நேருறு வினியோ கங்கேள்; நீடிய மரணம் கிள்ளை
யோரு சைப்பந் தோடத் தானிங் கிதம்சூ சனைக்கும்
பார விசாரிக் கூத்து பாண இலக்குக்கும் தானே. (17)

இலக்: (*கண்களின் ஓரங்களால்*) *பாரிசங்களில் குறுக்கே பார்ப்பது.*

வினியோ: *மரணம்; மகளிர் பந்தடித்தல்; இங்கிதம்; சூசனை; விசாரிக் கூத்து; பாண இலக்கு (அம்பினால் குறி பார்த்தல்).*

(*கிள்ளையோர் – கிளிபோன்றவர்; மகளிர். உசைத்தல் – அடித்தல். இங்கிதம் – இன்பம்; குறிப்பும் ஆம். சூசனை – குறிப்பு. இங்கிதமும் சூசனையும் ஒரே பொருளுடையனவாகவும் கொள்ளலாம். விசாரிக் கூத்து – குலாட நாட்டியம்.*

குறிப்பு: *இப்பாடல் மகாபரத சூடாமணியில் பின்வருமாறு மாறிக் காண்கிறது.*

பாரிசங் களிற்கு றுக்கே பார்ப்பது சாசி திஷ்டி;
நேருறும் விநியோ கங்கேள்; நீட்டிய பார்வை; கிள்ளை;
ஏறுவீ சையை முறுக்கல்; இங்கிதம் சூச னைக்கும்;
பாரவி சாரிக் கூத்து; பாணஇலக் குக்கும் தானே.

*வடமொழிச் சுலோகம் கூறும் விநியோகங்களாவன: இங்கிதம், மீசையைத் தொடுதல்; பாண இலக்கு; கிளி; நினைத்தல்; சூசனை; காரியாரம்பம்.*

(३) साचीदृष्टिः

स्वस्थाने तिर्यगाकारमपाङ्गवलनं क्रमात् ॥

साचीदृष्टिरिति ज्ञेया नाट्यशास्त्रविशारदैः ।

विनियोगः

इङ्गिते श्मश्रुसंस्पर्शे शरलक्ष्ये शुके स्मृतौ ॥
सूचनायां च कार्याणां नाट्ये साचीनिरीक्षणम् ।

**(4) ப்ரலோகிதம்** *(அகன்ற பார்வை)*

பக்கமி ரண்டும் பார்த்தல் பிராலோ கிதந்தா னுகும்;
மிக்கவே வினியோ கங்கேள்; வெகுசம்பாத் தியம் இரண்டு
பக்கஞ்சேர் பொருள்க ளெல்லாம் பார்க்கவும் அசைவ தற்கும்
மிக்கநேர் மொழியாய்! புத்தி யீனங்க ளுக்கும் ஆமே. (18)

**இலக்:** *இரண்டு பக்கங்களும் பார்த்தல் (ஒரு புறம் முதலி லும், மறுபுறம் பிறகும் பார்த்தல்).*

**விநியோ:** *மிகுந்த சம்பாத்தியம்: இரு பக்கங்களிலுமுள்ள எல்லாவற்றையும் பார்த்தல்; அசைவது; புத்தியீனங்கள்.*

*(மிக்க நேர் மொழியாய் – விளி.)*

குறிப்பு: *விநியோகத்தில் வெகு சம்பாத்யம் என்றிருக்குமிடத்தில் ப்ரஸஞ்ஜிதே என்று வடமொழிச் சுலோகத்தில் உள்ளது. அதற்குச் சுட்டிக் காட்டல் என்று பொருள் கூறுவர்.*

(४) प्रलोकितदृष्टिः

प्रलोकितं परिज्ञेयं चलनं पार्श्वभागयोः ॥

विनियोगः

उभयोः पार्श्वयोर्वस्तुनिर्देशे च प्रसंजिते ।
चलने बुद्धिजाड्ये च प्रलोकितनिरीक्षणम् ॥

**(5) நிமீலிதம்** *(மூடினது)*

அரைவிழி யாய்வி ழித்தா லாகும்நி மீலித தந்தான்;
உரைவினி யோகங் கேளாய்; உற்றிடு நமக்கா ரங்கள்
பரவசம் செபம் தியானம் பைத்தியம் கொஞ்சப் பார்வை
இருடிவே டங்களுக்கும் இயல்நிமீ லிதமே யாமே. (19)

குறிப்பு: *இக்கண் மீலிததிருஷ்டி எனவும் படும்.*

இலக் : *அரை விழியாய் விழித்தல்.*

விநியோ : *நமஸ்காரங்கள் ; பரவசம் ; ஜபம் ; தியானம் ; பைத்தியம் ; சிறு பார்வை ; இருடிவேடம்.*

(५) मीलितदृष्टिः

दृष्टेरर्धविकासेन मीलिता दृष्टिरीरिता ।

विनियोगः

आशीविषे पारवश्ये जपे ध्याने नमस्कृतौ ॥
उन्मादे सूक्ष्मदृष्टौ च मीलिता दृष्टिरीरिता ।

(6) உல்லோகிதம் *(மேலே பார்த்தல்)*

உயரவே பார்த்த திட்டி உல்லோகி தம்தா குகும் ;
சயமுறு வினியோ கங்கேள் ; தேவமண் டலங்கள் சந்திரன்
நயமுறு சிகரி கட்கும் நற்கொடி நுனிக ளுக்கும்
உயர்பாலிற் பொருட்கும் பூர்வ முறுசென்மங் கட்கும் தானே.
(20)

இலக் : *உயரப் பார்க்கும் பார்வை.*

விநியோ : *தேவ மண்டலங்கள் ; சந்திரன் ; (நிலாவும் ஆம்); கோபுரங்கள் ; கொடிகளின் (துவஜங்களின்) நுனிகள் ; உயரிடத்திலுள்ள பொருள்கள் ; பூர்வ ஜன்மங்கள்.*

*(சிகரி – கோபுரம்.)*

(६) उल्लोकितदृष्टिः

उल्लोकितमिति ज्ञेयमूर्ध्वभागे विलोकनम् ॥

विनियोगः

ध्वजाग्रे गोपुरे देवमण्डले पूर्वजन्मनि ।
औन्नत्ये चन्द्रिकादावप्युल्लोकितनिरीक्षणम् ॥

### (7) அனுவிருத்தம் (மேலும் கீழும் பார்த்தல்)

**மேலிடம் கீழி டத்தும் மிகவிரைந் தேகண் ணுற்பார்த்**
**தால்அனு விர்த்த திட்டி ; அதற்கினி வினியோ கங்கேள் ;**
**கோலியே மேவு பொல்லாக் கோபங்கட் காகும் ; அப்பால்**
**பாலவ லோகி தக்கண் களுக்கடை யாளம்சொல் லுவாரே.**
(21)

**இலக் :** *மேலும் கீழும் விரைந்து பார்த்தல்.*

**வினியோ :** *கொடிய கோபங்கள்.*

குறிப்பு : *மகாபரத சூடாமணியில் கடைசி வரி, 'சாலவே மந்திரிக்கும் பல வேலைகளிலு மாமே' என்று உள்ளது. வடமொழிச் சுலோகத்தில் 'கோபப் பார்வை ; நண்பர்களை வரவேற்றல்' என்று வினியோகங்கள் கூறப்படுகின்றன.*

### (७) अनुवृत्तदृष्टिः

ऊर्ध्वाधो वीक्षणं वेगादनुवृत्तमितीरितम् ।

### विनियोगः

कोपदृष्टौ प्रियामन्त्रेऽनुवृत्तनिरीक्षणम् ॥

### (8) அவலோகிதம் (கீழ் நோக்கும் பார்வை)

**அவனியைப் பார்த்த திட்டி அவலோகி தந்தா னுகும் ;**
**நவில்வினி யோகங் கேளாய் ; நடக்கநன் னீழற் பார்க்கப்**
**புவியினில் விசாரம் சூசம் புராணங்கள் படிப்ப தற்கும்**
**கவனம தாகத் தன்தே கம்பார்க் கவுந்தா னுமே.** (22)

**இலக் :** *பூமியைப் (கீழ் நோக்கிப்) பார்த்தல்.*

**வினியோ :** *நடக்கும்போது தன் நிழல் பார்த்தல் ; (நடத்தல் ; நிழல் பார்த்தல் என்றும் பிரித்துக் கூறலாம்) ; விசாரம் ; சூசனம் ; புராணம் படித்தல் ; தன் தேகத்தைக்(உறுப்புக்களை) கவனித்துப் பார்த்தல்.*

*(விசாரம் – படித்ததைத் திரும்பவும் பார்த்தல் என்றும், சூசம் என்ற சொல் சர்ச்சை என்றதன் திரிபாகக் கொண்டு ஆராய்தல் என்றும் பொருள்படுவதாகக் கொள்ளலாம்.*

*குறிப்பு: 1. மகாபரத சூடாமணியில் சூசகம் என்ற இடத்தில் சூரம் என்ற பதம் இருக்கிறது. வடமொழிச் சுலோகத்தில் சர்ச்சாயாம் என்றிருக்கிறது.*

### (८) अवलोकितदृष्टिः

अधस्ताद्दर्शनं यत्तदवलोकितमुच्यते ।

विनियोगः

छायालोके विचारे च चर्चायां पठनश्रमे ॥
स्वङ्गावलोकने यानेऽप्यवलोकितमुच्यते ।

திருஷ்டி பேதங்கள் முற்றும்

---

## 3. கண்ட பேதங்கள் (கழுத்தின் வேற்றுமைகள்)

### (1) சுந்தரீ கண்டம்

சுந்தரீ திரச்சீ னம்தான் துலங்கிய பரிவர்த் தினியே
வந்திடு பிரகம்பி தம்நால் வகைப்படு கண்டங் தன்னில்
சுந்தரி யிலக்க ணங்கேள்; சொல்கழுத் தைக்கு றுக்கே
விந்தை யாய்அசைத் தகண்ட மேவுசுங் தரியே யாமே. (23)

(பி-ம்.) *3. குறுக்கி.*

அதற்கினி வினியோ கங்கேள்; அடர்பல கார்யா ரம்பம்
மதித்தசி நேகா ரம்பம் மருவிய நல்லார் தங்கள்
கதித்தப யித்தி யங்கள் கனிந்திடு சரசங் கட்கும்
உதித்தசங் தோஷங் கட்கும் உவந்தசுங் தரியே யாமே. (24)

*கழுத்தின் பேதங்கள் நான்கு வகைப்படும்; அவை: (1) சுந்தரீ, (2) திரச்சீனம்; (3) பரிவர்த்திதம்; (4) பிரகம்பிதம்.*

#### சுந்தரீ கண்டம்

இலக்: *கழுத்தைக் குறுக்கே (மேல் கீழாக) அழகாய் அசைத்தல்.*

**விநியோ :** *பல காரிய ஆரம்பங்கள் ; நல்லோர் சிநேகாரம்பம் ; பயித்தியங்கள் ; சரசங்கள் ; சந்தோஷங்கள்.*

குறிப்பு : *வடமொழிச் சுலோகத்தில் காணும் வினியோகங்களாவன: சிநேகாரம்பம், முயற்சி, முற்றிலும் என்ற பொருளில், அகலம், மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொள்ளுதல்.*

## ३. ग्रीवा भेदाः

सुन्दरी च तिरश्चीना तथैव परिवर्तिता ॥
प्रकम्पिता च भावज्ञैर्ज्ञेया ग्रीवा चतुर्विधा ।

### (१) सुन्दरी ग्रीवा

तिर्यक्चञ्चलिता ग्रीवा सुन्दरीति निगद्यते ॥

**विनियोगः**

स्नेहारम्भे तथा यत्ने सम्यगर्थे च विस्तृते ।
सरसत्वानुमोदे च सा ग्रीवा सुन्दरी मता ॥

### (2) திரச்சீனை

**பாம்புபோ வதுபோ லிரண்டு பக்கத்து முயர்பா லாகத்**
**தேம்பவே அசைத்த கண்டம் திரச்சீனம் ; வினியோ கங்கேள் ;**
**பாம்புபோங் கதிக ளுக்கும் பரியகத் திக்கும் நீல**
**ஆம்பலின் விழியணங்கே ஆயாசங் கட்கும் ஆமே. (25)**

**இலக் :** *பாம்பு போவதுபோல, கழுத்தை இரண்டு பக்கங்களிலும் உயர்த்தி அசைத்தல்.*

**விநியோ :** *பாம்பின் கதிகள் ; பெரிய கத்தி ; ஆயாசங்கள்.*

*நீல ஆம்பலின் விழி அணங்கே – விளி.*

குறிப்பு : *வடமொழிச் சுலோகத்திலுள்ள கட்கச்ரமே என்றதைக் கத்தி, ஆயாசங்கள் என்று இப்பாடல் இரண்டாகக் கொண்டுள்ளது போலும்.*

## (२) तिरश्चीना ग्रीवा

पार्श्वयोरूर्ध्वभागे तु चलिता सर्पयानवत् ।
सा ग्रीवा तु तिरश्चीनेत्युच्यते नाट्यकोविदैः ॥

### विनियोगः

खड्गश्रमे सर्पगत्यां तिरश्चीना प्रयुच्यते ।

### (3) பரிவர்த்திதம்

தெரியிடம் வலத்திற் பாதித் திங்களைப் போல சைத்தால்
பரிவர்த்த னக்க ளந்தான் ; பகர்ந்திடு வினியோ கங்கேள் ;
அரியசிங் கார நாட்டியம் ஆசைமின் ஞர்க போலம்
பருகவும் ஆகு மென்றே பகர்ந்தனர் பரதத் தோரே. (26)

**இலக் :** *இடம் வலமாக, பாதிச் சந்திரனைப் போல, கழுத்தை அசைத்தல்.*

**வினியோ :** *சிருங்கார நாட்டியம் (லாஸ்யம்) ; காதலியின் கன்னங்களில் முத்தமிடல்.*

குறிப்பு : *பரிவர்த்தித என்றது தமிழில் பரிவர்த்தன என்று கொள்ளப் பட்டது. களம் - கழுத்து.*

## (३) परिवर्तित ग्रीवा

सव्यापसव्यचलिता ग्रीवा यत्रार्धचन्द्रवत् ॥
सा हि नाट्यकलाभिज्ञैर्विज्ञेया परिवर्तिता ।

### विनियोगः

शृङ्गारनटने कान्तकपोलद्वयचुम्बने ॥
नाट्यतन्त्रविचारज्ञैः प्रयोज्या परिवर्तिता ।

### (4) பிரகம்பித கண்டம்

திறமொடு முன்னும் பின்னும் சீரார்கண் டத்தை மாடப்
புறவுபோ லசைத்த கண்டம் பிரகம்பி தந்தா ஞகும் ;

உறுவினி யோகங் கேளாய்; உனக்கெனக் கென்ப தூஞ்சல்
நிறைகொள் தேசி நன்ஞட்டிய நீண்மாலை களுக்கு மாமே.
(27)

இலக்: *கழுத்தை, மாடப்புருவைப் போல், முன்னும் பின்னும் அசைத்தல்.*

விநியோ: *உனக்கு, எனக்கு என்பது; ஊஞ்சல்; தேசி நாட்டியம்; நீண்ட மாலைகள்.*

(४) प्रकम्पित ग्रीवा

पुरः पश्चात्प्रचलनात् कपोतीकण्ठकम्पवत् ॥
प्रकम्पितेति सा ग्रीवा नाट्यशास्त्रे प्रशस्यते ।

विनियोगः

युष्मदस्मदिति प्रोक्ते देशीनाट्ये विशेषतः ॥
दोलायां मणिते चैव प्रयोक्तव्या प्रकम्पिता ।

கண்ட பேதங்கள் முற்றும்

---

*அப்பால், ஒரு கையாலே பிடிக்கிற அத்தங்களின் பெயரும் அவற்றின் இலக்கணங்களும் வினியோகங்களும் சொல்லுகிருர்.*

## 4. ஒற்றைக் கைகள்

தருநேர் பதாகம், திரிப தாகம், அர்த்த பதாகம், சீர்
மருவு கர்த்தரி முகக்கை, மயூரம், தொடரர்த்த சந்திரன்,
அராளம், நீள்சுக துண்டம், தொடரான தோர்முட்டி, நற்சி
கரவத் தம், க பித்த வத்தம், கடகாமுகக் கையென்ப; (28)

சூசி, சந் திரகலா வத்தத் துடனே, பதும கோச மென்ப,
தேசுறு சர்ப்ப சிரம், மி ருகசிரம், சிங்கமுக மென்ப;
ஆசுறு காங்கூலத் தோடு, அலா பதுமம், சதுர மென்ப;
பேசுபி ரமர வத்தம், பின்னும் அம்சாசிய மென்ப; (29)

சரசஅம் சபட்ச அத்தம், சந்தம்சம், முகுள வத்தம்,
தெரிவுறு தாம்பிர சூடம், திரிசூல அத்த மென்றே,
இருகை கூடா தோர்கையில் இருபத் தெட்டுக்கை தன்னில்
மருவிய பதாகைக் குவரும் இலக்க ணஞ்சொல் வோமே. (30)

*ஒற்றைக் கைகள் இருபத்தெட்டு: அவை— 1. பதாகம், 2. த்ரிபதாகம், 3. அர்த்த பதாகம், 4. கர்த்தரிமுகம், 5. மயூரம், 6. அர்த்த சந்திரன், 7. அராளம், 8. சுகதுண்டம், 9. முஷ்டி, 10. சிகரம், 11. கபித்தம், 12. கடகாமுகம், 13. சூசீ, 14. சந்த்ரகலா, 15. பத்மகோசம், 16. சர்ப்பசிரஸ், 17. மிருகசீர்ஷம், 18. சிம்ஹமுகம், 19. காங்கூலம், 20. அலபத்மம், 21. சதுரம், 22. ப்ரமரம், 23. ஹம்சாச்யம், 24. ஹம்ஸ பக்ஷம், 25. சந்தம்சம், 26. முகுளம், 27. தாம்ரசூடம். 28. த்ரிசூலம் என்பன.*

## ४. हस्तभेदाः

अथेदानीं तु हस्तानां लक्षणं प्रोच्यते मया ॥

असंयुताः संयुताश्च हस्तद्वेधा निरूपिता ।
तत्रासंयुतहस्तानामादौ लक्षणमुच्यते ॥

### असंयुतहस्ताः

पताकस्त्रिपताकोऽर्धपताकः कर्तरीमुखः ।
मयूराख्योऽर्धचन्द्रश्चारालः शुकतुण्डकः ॥

मुष्टिश्च शिखराख्यश्च कपित्थः कटकामुखः ।
सूची चन्द्रकला पद्मकोशः सर्पशिरस्तथा ॥

मृगशीर्षः सिंहमुखः काङ्गुलश्चालपद्मकः ।
चतुरो भ्रमरश्चैव हंसास्यो हंसपक्षकः ॥

सन्दंशो मुकुलश्चैव ताम्रचूडास्त्रिशूलकः ।
इत्यसंयुतहस्तानामष्टाविंशतिरीरिता ॥



## (1) பதாகம் (கோடி)

அங்குலி நாலும் நீட்டி அங்குட் டந்தனை வளைத்த
செங்கையைப் பதாக மென்று செப்பினர் ; வினியோ
கங்கேள் ;
மங்கையே நாட்டியா ரம்பம் வாரிநீ ரோடல் காடு
தங்கு மிந்துவை நிந்தித்த தனதடங் கட்கும் தானே. (31)

இரவுக்கும் நதிக்கும் தெய்வ ரெய்திய கூட்டங் கட்கும்
துரகம் கண்டனம் காற்றுக்கும் தூய தோருப சாந்திக்கும்
தெரிக வலைகள் பிரதா பம்செய் பிரசாதம் சயனம்
பரவு சந்திரகாங் கைக்க பாடம் சாத்துதற் குந்தானே. (32)

அன்னமே ஏழுவிபத் திக்கும் அலைக்கும் வீதியிற் செல்வோர்க்கும்
மன்னுடல் வண்ணத் துக்கும் மருவுதன் தேகத் துக்கும்
சொன்னதோர் சபதத் திற்கும் சொற்பமாம் பாவ னைக்கும்
தென்பனை யோலை திண்ணை திரவியம் தொடவு மென்ப. (33)

ஆசீர் வாதத் துக்கும், அரசர்க்கும் அங்கங் கென்று
பேசல்சந் திக்க வுந்தான் பெறுசுகிர் தங்க ளுக்கும்
தேசுறு சமபுத் திக்கும் திகழ்ந்துமுன் செல்லு தற்கும்,
மாசுறு கத்தி தன்னை யணியவும் பதாகந் தானே, (34)

**இலக் :** *நான்கு விரல்களையும் நீட்டி, கட்டை விரலை வளைத்தல்.*

**விநியோ :** நாட்டியாரம்பம்; வாரி, நீரோட்டம் (கடலலை நகர்ச்சி); காடு; ஸ்தனப் பரப்பு; இரவு; நதி; தேவகூட்டம்; குதிரை; வெட்டுதல்; காற்று; உபசாந்தி; கவலைகள்; பிரதாபம்; உதவிய பிரசாதம்; படுக்கை; சந்திரகாங்கை; கதவு மூடுதல்:

ஏழு வேற்றுமை உருபுகள்; அலை; வீதியிற் செல்வோர்; உடலின் நிறம்; தன் தேகம்; சொன்ன சபதம்; சொற்ப பாவனை; தென்னை, பனை இவற்றின் ஓலை; திண்ணை; திரவியம்; தொடுதல்; ஆசீர்வாதம்; அரசன்; 'அங்கு, அங்கு' என்று பேசல்; சந்தித்தல்; ஒருவர் பெறும் சுகிர்தங்கள்; சமபுத்தி; முன் சொல்லுதல்; கத்தி அணிதல்.

31. வாரி என்றும் நீரோடல் என்றும் இரண்டாகவும் கொள்ளலாம். இந்துவை நிந்தித்த – சந்திரனைப் பழித்த.

32. கபாடம் – கதவு.

33. அன்னமே, விளி. விபத்தி–வேற்றுமை உருபு, மலைக்கும், என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். மருவு – பொருந்திய.

குறிப்பு: நூல்தோறும் இக்கையின் விநியோகங்கள் கூட்டியும் குறைந்தும் உள்ளன.

(१) पताकहस्तः

अङ्गुल्यः कुञ्चिताङ्गुष्ठः संश्लिष्टाः प्रसृता यदि ।
स पताककरः प्रोक्तो नृत्यकर्मविशारदैः ॥

विनियोगः

नाट्यारम्भे वारिवाहे वने वस्तुनिषेधने ।
कुचस्थले निशायां च नद्याममरमण्डले ॥

तुरङ्गे खण्डने वायौ शयने गमनोद्यमे ।
प्रतापे च प्रसादे च चन्द्रिकायां घनातपे ॥

कवाटपाटने सप्तविभक्त्यर्थे तरङ्गके ।
विधि [वीथी] प्रवेशभावेऽपि समत्वे चाङ्गरागके ॥

आत्मार्थे शपथे चापि तूष्णींभावनिदर्शने ।
तालपत्रे च खेटे च द्रव्यादिस्पर्शने तथा ॥

आशीर्वादक्रियायां च नृपश्रेष्ठस्य भावने ।
तत्र तत्रेतिवचने सिन्धौ तु सुकृतिक्रमे ॥

सम्बोधने पुरोगेऽपि खड्गरूपस्य धारणे ।
मासे संवत्सरे वर्षदिने संमार्जने तथा ॥

एवमर्थेषु युज्यन्ते पताकहस्तभावनाः ।



**(2) திரிபதாகம்**

அன்னமே பதாகந் தன்னில் அநாமிகாங் குலியா மொன்று
தன்னையே வளைக்கத் திரிபதா கம்விநி யோகம் கேளு;
மன்னிய வருடம் மாதம் வருருது தினங்க ளுக்கும்
முன்னிய வாரு கோற்கும் உயுத்தங் களுக்குந் தானே. (35)

மகுடங்கள் மரங்களுக்கும் வச்சிரா யுதந்த னக்கும்
மிகுதா ளி யின்பூ வுக்கும் விளக்கொடக் கினிச்சுவா லைக்கும்
பகர்பெறு கபோதம் லேக பத்திரம் பாணங் கட்கும்
மகிழ்ந் தீந்து வாங்கு தற்கும் வழுத்தினர் திரிப தாகம். (36)

இலக்: *பதாகக் கையில் அணிவிரலை (மோதிர விரலை) வளைத்தல்.*

**விநியோ :** வருடம், மாதம், ருது, நாள் ; துடைப்பம் ; யுத்தங்கள் ; கிரீடம் ; மரம் ; வச்சிராயுதம் ; தாளிப்பூ ; விளக்கு ; அக்கினிச் சுவாலை ; புறா ; பத்திரலேகை ; பாணம் ; கொடுத்து வாங்குதல்.

(அநாமிகாங்குலி–மோதிர விரல். தாளிப்பூ–கேதகி. கபோதம்–புறா. (சுவடியில் கபோலம் என்று காண்கிறது ; கபோலம்–கன்னம்.) பத்திரலேகம் ; முகத்திலும் தோளிலும் எழுதப் பெறும் கோலங்கள் ; பத்திரம்–அழகு. சுவடியில் 'ரேகை பத்திரம்' என்று காண்கிறது. ஈந்து வாங்குதல்–பரிவர்த்தனை. 35 ஆம் செய்யுளில் காணும் விநியோகங்களிற் சில வடமொழிச் சுலோகத்தில் இல்லை).

(२) त्रिपताकहस्तः

स एव त्रिपताकः स्याद्वक्रितानामिकाङ्गुलिः ॥

विनियोगः

मकुटे वृक्षभावेषु वज्रे तद्धरवासवे ।
केतकीकुसुमे दीपे वह्निज्वालाविजृम्भणे ॥
कपोते पत्रलेखायां बाणार्थे परिवर्तने ।
युज्यते त्रिपताकोऽयं कथितो भरतोत्तमैः ॥



### (3) அர்த்தபதாகம் (அரைக்கொடி)

கண்டதி ரிபதா கத்தில் கனிட்டிகை தனைவ ளைத்துக்
கொண்டதர்த் தபதா கம்பின் கூறிய விநியோ கங்கேள் ;
வண்டமிழ்ப் பலகை தீரம் வருமிரு பேர்க ளுக்கும்
துண்டிக்குஞ் சூர்க்கத் திதுவசம் சிகரிக்கும் தானே. (37)

(பி–ம்.) *3. வண்டுளி. 4. துண்டாம்.*

இலக் : *திரிபதாகக் கையில் சுண்டுவிரலை வளைத்தல்.*

விநியோ : *எழுது பலகை ; (ஆற்றின்) கரை ; வரும் இருவர் ; சூர்க்கத்தி ; கொடி ; சிகரி ; (கோபுரம்).*

குறிப்பு : *இன்னும் விநியோகங்கள் : இலை ; அரம் ; கொம்பு.*

### (३) अर्धपताकहस्तः

त्रिपताके कनिष्ठा चेद् वक्रिताऽर्धपताकिका ।

### विनियोगः

पल्लवे फलके तीरे उभयोरितिवाचके ॥
क्रकचे छुरिकायां च ध्वजे गोपुरशृङ्गयोः ।
युज्यतेऽर्धपताकोऽयं तत्तत्कर्मप्रयोगके ॥



(4) கர்த்தரீமுகம்
(கத்தரிக்கோலின் அலகுகள்)



(5) மயூரம் (மயில்)

அர்த்தப தாகத் திற்றர்ச் சனிகனி பின்ன தாக
வைத்தல் கர்த்தரி முகக்கை; வயணங்கள் ஆண்பெண் ணேப்பி
ரித்திடல் விபரீ தங்கள் புரண்டிடல் கண்க டைக்கும்
மொய்த்திடு மரணம் பேதம் முகில் மின்ன லுக்கும் தானே. (38)

(பி-ம்.) *1. அங்குட்டம்.*

வையத்தில் வீழ்த லுக்கும் வளர்கொடி களுக்கும் போக
சையவி ரகத்துக் கும்கர்த் தரிமுகக் கைசொன் ஞர்பின்
அமைவுறு மயூர வத்தம் வருமிலக் கணம்அ நாமி
கையுட னங்குட் டத்தைக் கலந்திட மயூரங் தானே. (39)

மயூரக்கை விரியோ கங்கேள் மயிலுக்கும் கொடிக ளுக்கும்
இயலுறு சக்கரங் தன்னே யெறியவும் கூந்த லுக்கும்
நயனங்கள் திலதத்துக்கும் லலாடத் துக்கும் கண் ணீராம்
பயங்காட் டல்சாத் திரவாதம் பிரசித்தங் களுக்குங் தானே. (40)

4. கர்த்தரீமுகம்

இலக்: *அர்த்தபதாகக் கையில் சுட்டுவிரலையும், சுண்டு விரலையும் பின்னே வைத்தல்.*

**விநியோ:** ஆண் பெண்ணைப் பிரித்திடல்; விபரீதங்கள்; புரண்டிடல்; கடைக்கண்; மரணம்; (மன) பேதம்; மேகத்தில் மின்னல்.

(விரகத்தில்) தரையில் விழுதல்; (வளர்கொடிகள்) போக சைய விரகம்.

**குறிப்பு:** கர்த்தரீ முகக்கையின் இலக்கணத்தைப் பற்றிய பிற நூல்கள் கூறுவன: **சிலப்பதிகாரம்:** திரிபதாகையின் முடங்கிய அணிவிரல் (மோதிர விரல்) புறத்ததாகிய நடுவிரலைச் சுட்டு விரலோடு பொருந்த நிமிர்ப்பது.

**நாட்டிய சாஸ்திரம்:** திரிபதாக அஸ்தத்தில் தர்ச்சனியை (சுட்டு விரலைப்) பின்புறமாக வளைத்தல்.

### 5. மயூரம்

**இலக்:** (கர்த்தரீ முகக்கையின்) மோதிர விரலோடு கட்டை விரலைக் கலப்பது; (மற்ற விரல்கள் பிரிந்து நிற்க).

**விநியோ:** மயில் (கழுத்து); கொடிகள்; சக்கரம் எறிதல்; கூந்தல்; கண்; லலாட திலகம்; கண்ணீர்விட்டுப் பயங்காட்டல்; சாத்திரவாதம்; பிரசித்தங்கள்.

**குறிப்பு:** லலாடம், திலகம் என்று இரண்டாகப் பிரித்தலும் ஆம். லலாடம் - நெற்றி.

### (४) कर्तरीमुखहस्तः

अस्यैव चापि हस्तस्य तर्जनी च कनिष्ठिका ।
बहिः प्रसारिते द्वे च स करः कर्तरीमुखः ॥

### विनियोगः

स्त्रीपुंसयोस्तु विश्लेषे विपर्यासपदेऽपि वा ।
लुण्ठने नयनान्ते च मरणे भेदभावने ॥
विद्युदर्थेऽप्येकशय्याविरहे पतने तथा ।
लतायां युज्यते यस्तु स करः कर्तरीमुखः ॥

### (५) मयूरहस्तः

अस्मिन्ननामिकाङ्गुष्ठौ श्लिष्टौ चान्याः प्रसारिताः ।
मयूरहस्तः कथितः करटीका विचक्षणैः ॥

विनियोग:

मयूरास्ये लतायां च शकुने वमने तथा ।
अलकस्यापनयने ललाटतिलकेषु च ॥

नद्युदकस्य निक्षेपे शास्त्रवादे प्रसिद्धके ।
एवमर्थेषु युज्यन्ते मयूरकरभावनाः ॥

**(6) அர்த்த சந்திரன்** (அரைமதி)



திட்டமாம் பதாகக் கையிற் சேருமங் குட்டங் தன்னை
சட்டமாய் நீட்ட அர்த்த சந்த்ரனும் விநியோ கங்கேள் ;
அட்டமிச் சந்தி ரன்பல் லாயுதம் கண்டத் திற்கை
தொட்டுத்தள் ளவும்தே வாபி டேகங்க ளுக்கும் தானே. (41)

(பி-ம்.) *1. திட்டம்ப தாகக். 4. இட்டுத் தள்ளவும்.*

பாத்திரங் களுக்கும் மேவுற் பவங்கட்கும் இடைக்கு மென்ப
சாத்திய தியானங் கட்கும் தனக்குள்சிந் தைக்கும் மென்பி
ரார்த்தனை களுக்கும் ஊணர் பால்நமஸ் காரங் கட்கும்
காத்திரந் தொடவும் மேவுங் கரமர்த்த சந்த்ரன் தானே. (42)

இலக் : *பதாகைக் கையில் கட்டை விரலை நீட்டுதல்.*

விநியோ : *(தேய்பிறை) அஷ்டமி சந்திரன் ; பல்லாயுதங்கள், (ஒருவகை ஆயுதம்) ; கழுத்திற் கைவைத்துத் தள்ளுதல் ; தேவாபிஷேகங்கள் ; உண்கலங்கள் ; உற்பவங்கள் (தோற்றம்) ; இடுப்பு ; தியானம் ; சிந்தனை, (ஆராய்ச்சி) ; பிரார்த்தனை ; ஹூணர்களை நமஸ்கரித்தல் (ஸலாம்) ; அவயவங்களைத் தொடுதல்.*

(६) अर्धचन्द्रहस्तः

अर्धचन्द्रकरः सोऽयं पताकेऽङ्गुष्ठसारणात् ।

विनियोगः

चन्द्रे कृष्णाष्टमीभाजि गलहस्तार्थकेऽपि च ॥

भल्लायुधे देवतानामभिषेचनकर्मणि ।

भुक्पात्रे चोद्भवे कट्यां चिन्तायामात्मवाचके ॥

ध्याने च प्रार्थने चापि अङ्गानां स्पर्शने तथा ।

प्राकृतानां नमस्कारे अर्धचन्द्रो नियुज्यते ॥

**(7)** அராளம் (வளைந்தது)



தையலே பதாகம் தன்னிலத் தர்ச்சனி தனைவ ளைத்த
கைஅராள மதாம்; வினியோ கங்களின் வயணம் கேளாய்;
மெய்யு கந்த மிர்தபானம் விடபானங் களுக்கும் என்ப
வையகம் தனில்பிர சண்ட மாருதத் துக்கும் தானே. (43)

இலக்: *பதாகக்கையில் சுட்டு விரலை வளைத்தல்.*

வினியோ: *அமுதபானம்; விஷபானம்; பிரசண்ட வாயு.*

(७) अरालहस्तः

पताके तर्जनी वक्रा नाम्ना सोऽयमरालकः ।

विनियोगः

विषाद्यमृतपानेषु प्रचण्डपवनेऽपि च ॥



## (8) சுகதுண்டம் (கிளிமூக்கு)

அகமகிழ் அராளம் தன்னில் அநாமிகை விரல்வ ளைத்தால்
சுகதுண்ட அத்த மாகும்; சொல்வினி யோகங் கேளாய்;
பகர்பாண மெய்த லுக்கும் பாவனை களுக்கும் என்ப
மகிழுமுள் ளர்த்தங் கட்கும் மர்மங்க ளுக்கும் தானே. (44)

இலக்: *அராளக் கையில் மோதிர விரலை வளைத்தல்.*

விநியோ: *பாணத்தை எய்தல்; பாவனைகள்; உள்ளர்த்தம்; மர்மங்கள்.*

குறிப்பு: *பிற விநியோகங்கள்: ஈட்டி, தன் இருப்பிடத்தை நினைத்துக் கொள்ளுதல்; உக்கிர பாவம்.*

### (८) शुकतुण्डहस्तः

अस्मिन्ननामिका वक्रा शुकतुण्डकरो भवेत् ।

विनियोगः

बाणप्रयोगे कुन्तार्थे वाऽऽलयस्य स्मृतिक्रमे ।।
मर्मोक्त्यामुग्रभावेषु शुकतुण्डो नियुज्यते ।



## (9) முஷ்டி (முட்டிக்கை)

அங்குலி நாலு மேவுள் ளங்கையில் வளைத்த தன்மேல்
அங்குட்டம் வளைத்தால் முட்டி அத்தமாம் ; வினியோ கங்கேள்;
தங்கிய திறங்க ளுக்கும் தலைமயிர் பிடிக ளுக்கும்
திடங்கொள்மல் லர்கள் யுத்தங் கள்தானே கட்கும் தானே. (45)

**இலக் :** *நான்கு விரல்களையும் உள்ளங்கையில் வளைத்து, அதன்மேல் கட்டைவிரலை வளைத்தல்.*

**வினியோ :** *திறம் (உறுதி நிலை) ; தலைமயிரைக் கையால் பிடித்தல் ; மல்லர்களின் யுத்தம் ; சேலைகள்.*

குறிப்பு : பிடிகள் என்பதைத் தனியே பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

### (९) मुष्टिहस्तः

मेलनादङ्गुलीनाञ्च कुञ्चितानां तलान्तर ॥
अङ्गुष्ठश्चोपरियुतो मुष्टिहस्तोऽयमीर्यते ।

### विनियोगः

स्थिरे कचग्रहे दार्ढ्ये वस्त्वादीनां च धारणे ॥
मल्लानां युद्धभावेऽपि मुष्टिहस्तोऽयमिष्यते ।



## (10) சிகரம் (உச்சி)

உதவிய முட்டி யத்தத் துயர அங்குட்டம் நீட்ட
இதமுறு சிகர மாகும்; இதற்கினி வினியோ கங்கேள்;
அதரத்திற் கும்வில் லிற்கும் ஆலிங்க னங்க ளுக்கும்,
மதனுக்கும், இலிங்கத் திற்கும், நிச்சயம், வரம்பிற் காமே. (46)

இல்லையென் பதும்,நி னைத்தல், இளைத்தரு பங்கள், நாதம்,
பல்லுடன் பிதிரு கர்மம், பக்கங் களுக்கு மென்ப;
நல்லபி நயவா ரம்பம், நாதஞ் சேர்மணிக ளுக்கும்,
மெல்லியர் இடையிற் கட்டி வரைந் திழுக்கவுந்தா னுமே. (47)

இலக்: *முட்டிக் கையில் கட்டைவிரலை உயர நீட்டல்.*

வினியோ: *உதடு; வில்; ஆலிங்கனங்கள்; காமன்; இலிங்கம்; நிச்சயம்; வரம்பு; இல்லை என்பது; நினைத்தல்; இளைத்த உருவங்கள்; ஓசை; பல்; பிதிர் கருமம்; பக்கங்கள்; அபிநய ஆரம்பம்; நாதம்சேர் மணிகள்; (மணிகளை அடித்தலும் ஆம்); மகளிர் இடுப்பில் (உள்ள மேகலையை) விரைந்து இழுத்தல்.*

குறிப்பு: இங்கு, அபிநய ஆரம்பம் என்றிருக்க, வடமொழிச் சுலோகத்தில் அபிநய முடிவில் என்றிருக்கிறது.

## (१०) शिखरहस्तः

चेन्मुष्टिरुन्नताङ्गुष्ठः स एव शिखरःकरः ॥

विनियोगः

मदने कार्मुके स्तम्भे निश्चये पितृकर्मणि ।
ओस्ष्ठे प्रविष्टरूपे च रदने प्रश्नभावने ॥
लिङ्गे नास्तीति वचने स्मरणेऽभिनयान्तिके ।
कटिबन्धाकर्षणे च परिरम्भविधिक्रमे ॥
घण्टानिनादे शिखरो युज्यते भरतादिभिः ।



(11) கபித்தம் (விளாம்பழம்)

இச்சையாய்ச் சிகரந் தன்னில் இலங்குமங் குட்டந் தன்னைத்
தர்ச்சனி யுடனே சேர்த்த தாகுமே கபித்த வத்தம்;
லெட்சுமி, சரசுவ திக்கும், நீண்வலை வீசு தற்கும்,
பட்சமாய்ச் சித்தி ரம்போற் படமெழு திடவுந் தானே; (48)

விரும்பிய தூப தீபம் வெட்டெனும் தாளங் கட்கும்
பிரம்பினைப் பிடிக்க வும்கபித் தக்கை சொன்னூர்; பின்பு,
அருங்கட காமு கக்கைக் காமி லக்கணஞ் சொல்லிக்
கரும்புநேர் மொழியாய்! வினியோ கங்களுஞ் சொல்லு கின்றுரே. (49)

**இலக்:** *சிகரக் கையில் கட்டைவிரலைச் சுட்டுவிரலுடன் சேர்த்தல்.*

**வினியோ:** *லக்ஷ்மி; ஸரஸ்வதி; வலை வீசுதல்; படமெழுதல்; தூப தீபம்; தாளங்களைத் தட்டல்; பிரம்பு பிடித்தல்.*

**குறிப்பு: பிற இலக்.** *சிகரக் கையின் சுட்டு விரலை வளைத்துக் கட்டை விரலின் நுனியில் வைத்தல் (பாடலின் பொருளை இப்படியே கொள்க).*

**பிற விநியோகங்கள் :** *பசுவின் பால் கறத்தல் ; அஞ்சனம் ; லீலா நேரத்தில் மலர் அணிதல் ; ஆடைகளின் தலைப்புக்களைப் பிடித்தல் ; வஸ்திரங்களைத் தொகுத்தல்.*

### (११) कपित्थहस्तः

अङ्गुष्ठमूर्ध्नि शिखरेवक्रिता यदि तर्जनी ॥
कपित्थाख्यः करः सोऽयं कीर्तितो नृत्तकोविदैः ।

विनियोगः

लक्ष्म्यां चैव सरस्वत्यां नटानां तालधारणे ॥
गोदोहनेऽप्यञ्जने च लीलाकुसुमधारणे ।
चेलाञ्चलादिग्रहणे पटस्यैवावगुण्ठने ॥
धूपदीपार्चने चापि कपित्थः संप्रयुज्यते ।



1 2 3

### (12) கடகாமுகம் (வளையின் வாய்)

தங்குக பித்தக் கையில் தர்ச்சனி மத்தி மத்தோடு
அங்குட்டங் கூட்டி நீட்ட அதுகட காமு கங்காண் ;
பொங்கமாய்ப் பேசு தற்கும் பூவுக்கும் பார்வை கட்கும்
துங்கமாய் நாணில் கைதொட் டிழுத்திட வும்தானே. (50)

முத்துக்கும் ரத்தினத் துக்கும் மோகநாக வல்லி கட்கும்
முத்திராங் கிதங் கட்கும் முதிர்ந்த வாசங் களுக்கும்
கத்தூரி யாதியாக் கமழ்வஸ்துச் சிமிழ்த னக்கும்
கைத்தலங் தன்னில் மிக்க கடகா முகக்கை தானே. (51)

**இலக்:** *கபித்தக் கையில் சுட்டுவிரல், நடுவிரல், கட்டை விரல் இவற்றைக் கூட்டல்.*

**விநியோ:** *மகிழ்ச்சியாய்ப் பேசுதல்; பூ கொய்தல்; பார்வைகள்; வில்லின் நாணில் கை வைத்து இழுத்தல்; முத்து; இரத்தினம்; நாகவல்லி, (வெற்றிலை கொடுத்தல்); முத்திராங்கிதம்; சிறந்த வாசனைகள்; கஸ்தூரி முதலியன வைக்கும் சிமிழ்.*

குறிப்பு: *பிற விநியோகங்கள்: முத்துமாலை அல்லது பூமாலை பிடித்தல்; சந்தனம், கஸ்தூரி அரைத்தல்; வாசனை பூசுதல். படங்களில் (1) இலக்கணப்படி உள்ளது; (2) சம்பிரதாயத்தில் இருப்பது; (3) பாலராம பரதத்தில் கண்டபடி.*

### (१२) कटकामुखहस्तः

कपित्थे तर्जनी चोर्ध्वमुच्छ्रिताङ्गुष्ठमध्यमा ॥
कटकामुखहस्तोऽयं कीर्तितो भरतागमैः ।

### विनियोगः

कुसुमावचये मुक्तास्रग्दाम्नां धारणे तथा ॥
शरमध्याकर्षणे च नागवल्लीप्रदानके ।
कस्तूरिकादिवस्तूनां पेषणे गन्धवासने ॥
वचने दृष्टिभावेऽपि कटकामुख इष्यते ।



(13) ஸூசீ (ஊசி)

கடகா முகக்கை தன்னில் கருதுதர்ச் சனியை நீட்டத்
திடமுறு சூசி யென்று செப்பினர் ; வினியோ கங்கேள் ;
படருமோர் அர்த்தத் திற்கும், பரபிரம பாவ னைக்கும்,
அடர்நூ றிலக்கம், ஓசை, ஆதவ னுக்கும் ஆமே. (52)

சக்கர மயக்கம், வட்டம், சடை, தனித்த விடம்,மாலை,
உக்கிரம், தானி ளைத்த வுடல்,பிரித் திடல்,முன் மூக்கு,
மிக்கதுங் துபிய டித்தல், வேளான் மண்டிரிகை வண்டில்,
தக்கவூர், உலகம், வெயில் தாங்கிய குடைக்கும் என்ப. (53)

அதுவது வென்ப தற்கும், ஆச்சரி யங்க ளுக்கும்,
எதுவோ வதென்ப தற்கும், இசைந்த ரோமா வலிக்கும்,
துதிபெறு சூசி யத்தஞ் சொல்லிச் சந்திரகலா வத்தம்
விதவித மிலக்க ணங்கள் வினியோகஞ் சொல்லு வோமே. (54)

இலக் : *கடகாமுகக் கையின் சுட்டு விரலை நீட்டல்.*

வினியோ : *ஒன்று என்பதைக் குறிப்பது ; பரப்பிரம பாவனை ; நூறு என்னும் இலக்கம் ; ஓசை ; சூரியன்.*

*சக்கரம் சுழற்றல் ; குயவன் சக்கிரம் ; சடை ; தனித்த இடம் ; மாலை ; உக்கிரம் ; இளைத்த உடல் ; பிரித்திடல் ; முன் மூக்கு ; துந்துபி யடித்தல் ; குயவன் (குயவன்) திரி சக்கிரம் ; ஊர் ; உலகம் ; குடை.*

*'அது, அது' என்பது; ஆச்சரியங்கள்; 'எதுவோ, அது' என்பது; உரோம வரிசை.*

### (१३) सूचीहस्तः

ऊर्ध्वप्रसारिता यत्र कटकामुखतर्जनी ॥
सूचीहस्तः स विज्ञेयो भरतागमकोविदैः ।

विनियोगः

एकार्थेऽपि परब्रह्मभावनायां शतेऽपि च ॥
रवौ नगर्यां लोकार्थे तथेति वचनेऽपि च ।
यच्छब्देऽपि च तच्छब्दे विजनार्थेऽपि तर्जने ॥
कार्श्ये शलाके वपुषि आश्चर्ये वेणिभावने ।
छत्रे समर्थे पाणौ च रोमाल्यां भेरिवादने ॥
कुलालचक्रभ्रमणे रथाङ्गमण्डले तथा ।
विवेचने दिनान्ते च सूचीहस्तः प्रकीर்तितः ॥

**(14) சந்திர கலா**
(சந்திரனின் கலை)



அருமையாம் சூசி தன்னில் அங்குட்டம் நீட்ட வேசந்
திரகலா அத்த மென்று செப்பினர்; வினியோ கங்கேள்;
அரன்திரு முடிகங் கைக்கும் வளைவா மென்ப தற்கும்
வருமுக மொருப டைக்கும் வாலசந் திரனுக்குந் தானே. (55)

இலக்: *சூசிக் கையில் அங்குட்டத்தை நீட்டுதல்.*

வினியோ: *சிவபிரான் திருமுடியில் விளங்கும் கங்கை; வளைவு ஆம் என்பது; முகம்; ஒருவகைப் படை; பால சந்திரன்.*

குறிப்பு: இலக்: (வேறு விதம்) கட்டை விரல் விடுபட்ட சூசி சந்திர கலாவாகும்.

(१४) चन्द्रकलाहस्तः

सूच्यामङ्गुष्ठमोक्षे तु करश्चन्द्रकला भवेत् ।

विनियोगः

चन्द्रे मुखे च प्रादेशे तन्मात्राकारवस्तुनि ॥
शिवस्य मकुटे गङ्गानद्यां च लगुडेऽपि च ।
ये(ए)षां चन्द्रकला चैव विनियोज्या विधीयते ॥



**(15) பதுமகோசம்**

அங்குலி களைப்ப ரப்பி ஐவிரல் நுனிவ ளைத்த
செங்கைதான் பதும கோசம்; செப்புநீள் வினியோ கங்கேள்;
பங்கய மலருக் கும்செம் பரத்தம் பூவிற்கும் பெண்கள்
கொங்கைக்கும் பந்துக்கும் பூங்கொத் துக்கும் மணிக்கும் என்ப. (56)

மாம்பழங் களுக்கும் புட்ப வருடங்க ளுக்கும் நல்வி
ளாம்பழங் களுடன் வில்வப் பழமுதற் கனிக ளுக்கும்,
பூம்பந்து களுக்கும் அற்ப போசன விதானங் கட்கும்,
தூம்படர் புற்று வட்டம் துலங்குமுட் டைக்குந் தானே. (57)

**இலக்:** *ஐந்து விரல்களையும் (விலக்கப்) பரப்பி, விரல் நுனிகளை வளைத்தல்; (உள்ளங்கை சிறிதளவு குழிந்திருக்க வேண்டும்).*

விநியோ : தாமரை மலர் ; செம்பருத்திப் பூ ; கொங்கை ; பந்து ; பூங்கொத்து ; மணி ; மாம்பழம் ; புஷ்ப வருஷம் (பூச் சொரிதல்) ; விளாம்பழம், வில்வப்பழம் முதலியன ; பூம்பந்து; அற்ப போசனம் ; விதானம் ; புற்று ; வட்டம் ; முட்டை.

தாம்பு – உள்துளை.

## (१५) पद्मकोशहस्तः

अङ्गुल्यो विरलाः किञ्चित् कुञ्चितास्तलनिम्नगाः ।
पद्मकोशाभिधो हस्तो तान्निरूपणमुच्यते ॥

### विनियोगः

फले बिल्वकपित्थादौ स्त्रीणां च कुचकुम्भयोः ।
आवर्ते कन्दुके स्थाल्यां भोजने पुष्पकोरके ॥
सहकारफले पुष्पवर्षे मञ्जरिकादिषु ।
जपाकुसुमभावे च घण्टारूपे विधानके ॥
वल्मीके कमलेऽप्यण्डे पद्मकोशो विधीयते ।



## (16) சர்ப்ப சிர்ஷம் (பாம்புப் படம்)

விரைசேர்ப தாகந் தன்னில் விரல்களை வளைத்தால் சர்ப்ப
சிரசவத் தமாம்அ தற்குச் செப்பினர் வினியோ கங்கேள் ;
அரவுக்கும், மந்தத் துக்கும், ஆனைமத் தகங்க ளுக்கும்,
மருவுசந் தனங்க ளுக்கும், மல்லர்தோள் களுக்கு மென்ப. (58)

உன்னிய முனிவர், தேவர், உதககதா னங்க ளுக்கும்,
தன்னிருப் பிடம்பு ரோக்ஷ ணங்கள்ஆ தரவு கட்கும்,
மன்னு சர்ப்ப சிரச வத்தமா மென்று வழுத்தினர்
பின்னன மே!மிருக சீரிஷ அங்கையைச் சொல்கின் றுரே.

(59)

*சர்ப்ப சிரஸ்–பாம்புத் தலே. (இது சர்ப்ப சீர்ஷம் எனவும் படும்).*

**இலக் :** *பதாகக் கையில் விரல்களே (நுனி) வளேத்தல்.*

**விநியோ :** *பாம்பு; மந்தமான குரல், (மந்த்ரஸ்தாயி); யானேத் தலே; சந்தனம்; மல்லர் தோள்; முனி தர்ப்பணம்: தேவதர்ப் பணம்; தன் இருப்பிடம் புரோக்ஷணம் செய்தல் (நீர் தெளித் தல்); ஆதரவு.*

## (१६) सर्पशीर्षहस्तः

पताका नमिताग्रा चेत् सर्पशीर्षकरो भवेत् ।

### विनियोगः

चन्दने भुजगे मन्द्रे प्रोक्षणे पोषणादिषु ।
देवस्योदकदानेषु आस्फाले गजकुम्भयोः ॥
भुजस्थाने तु मल्लानां युज्यते सर्पशीर्षकः ।



## (17) மிருக சீரிஷம் (மான் தலை)

அரிசர்ப்ப சிரக்கை தன்னில் அங்குட்டம் கனியை நீட்ட
மிருகசி ரக்கை யென்று விளம்பினர் ; வினியோ கங்கேள் ;
திரிபுண்ட ரத்துக்கும் திரைக ளுக்கும் படிக்கும்
கரமரி யாதை கட்குங் கபோலங்க ளுக்கு மென்ப. (60)

பாதவிந் நியாசங் கட்கும் பண்பான பெண்க ளுக்கும்,
நாதங் களுக்கும் சுவர்க்கும், நல்லிருப் பிடங்க ளுக்கும்,
நீதிசேர் மிருக சீரிஷம் நிகழ்த்தினர் பரதந் தன்னில்
மூதறி வுடையோர்ச் சிங்க முகக்கையைச் சொல்கின் றாரே. (61)

*(அறிசர்ப்ப என்றது எதுகை நோக்கி அரிசர்ப்ப என்று ஆயிற்று எனக் கொள்க. அரி என்ற சொல்லுக்கே பாம் பென்ற பொருளும் உண்டு.)*

இலக் : *சர்ப்பசிரக் கையில் கட்டை விரலையும் சுண்டு விரலையும் நீட்டல்.*

வினியோ : *திரிபுண்டரம் ; அலைகள் ; (அல்லது திரைகள் ;) படி ; கை மரியாதைகள் ; கன்னங்கள் ; பாத வின்யாஸங்கள் ; பண்பான பெண்கள் ; நாதம் ; சுவர் ; நல்ல இருப்பிடங்கள்.*

குறிப்பு : *மேலும் வினியோகங்கள்: சக்கரம்; அளவு; பீதி; விவாதம்; உடை; கூப்பிடுதல்; மான்தலை; யாழ்; குடைபிடித்தல்; அடிவைத்தல்; பிரியர்களை அழைத்தல்.*

## (१७) मृगशीर्षहस्तः

अस्मिन् कनिष्ठिकाङ्गुष्ठे प्रसृते मृगशीर्षकः ।

विनियोगः

स्त्रीणामर्थे कपोले च चक्रमर्यादयोरपि ।
भीत्यां विवादे नेपथ्ये आह्वाने च त्रिपुण्ड्रके ॥
मृगमुखे रङ्गव[म]ल्ल्यां पादसंवाहने तथा ।
सर्वस्वे मिलने काममन्दिरे छत्रधारणे ।
सञ्चारे च प्रियाह्वाने युज्यते मृगशीर्षकः ॥



(18) சிங்க முகம்
(சிங்கத்தின் முகம்)



(19) காங்குலம்

அநாமிகை மத்தி மத்தோ டங்குட்ட நுனிகூட் டி,தர்ச்
சனிகனிட் டிகையி ரண்டும் தனித்தனி பரப்பி நீட்டல்
இனியசிங் கமுக மீதே; இதற்குநீ வினியோ கங்கேள்;
வனிதையே! ஹோமம், யானை, மான், முயலுக்கும் என்ப; (62)

தாது சோதனைக்கும், சிங்கா சனத்துக்கும், தருப்பை கட்கும்,
ஓது தாமரை மணிக்கும் உரைத்தார் சிங்கமுகந் தானே;
மோது பத்துமகோ சத்தின் முன்அநா மிகைவ ளைத்தால்
ஈது காங்கூல மாகுமி னிவினி யோகஞ் சொல்வார். (63)

சிறுதனம், கொட்டைப் பாக்கு, தேங்காய்ஆம் பற்பூ விற்கும்,
சிறுபொருள், சகோர பட்சி, சிறந்த சாதகப் பட்சிக்கும்,
சிறுமணிக ளுக்கும், எலுமிச் சம்பழங் களுக்கும் என்று
அறியவே காங்கூ லக்கை யாமென விளம்பி னரே. (64)

### 18. சிங்கமுகக் கை

**இலக் :** *மோதிர விரல், நடுவிரல், கட்டை விரல் இவற்றின் நுனிகளைக் கூட்டி, ஆள்காட்டி விரலையும் சுண்டு விரலையும் தனித்தனியே பரப்பி நீட்டல்.*

**விநியோ :** *ஹோமம்; யானை; மான்; முயல் ; தாது சோதனை; சிங்காசனம் ; தருப்பை ; தாமரை ; மணி.*

குறிப்பு : *மேலும் விநியோகங்கள் : சிம்மமுகம்; வைத்யபாக சோதனை.*

### 19. காங்குலம்

**இலக் :** *பதுமகோசக்கையில் மோதிர விரலை (முன் பக்கமாக) வளைத்தல்.*

**விநியோ :** *இள மார்பு ; கொட்டைப் பாக்கு ; தேங்காய் ; ஆம்பற்பூ; சிறு பொருள்; சகோரப் பறவை; சாதகப் பறவை; சிறு கிண்கிணி ; எலுமிச்சம்பழம்.*

### (१८) सिंहमुखहस्तः

मध्यमानामिकाग्राभ्यामङ्गुष्ठो मिश्रितो यदि ॥
शेषौ प्रसारितौ यत्र स सिंहास्यकरो भवेत् ।

### विनियोगः

होमे शशे गजे दर्भचलने पद्मदामनि ॥
सिंहानने वैद्यपाके शोधने संप्रयुज्यते ।

### (१९) काङ्गुलहस्तः

पद्मकोशेऽनामिका चेन्नम्रा काङ्गुलहस्तकः ॥

विनियोग:

लकुचस्य फले बालकिङ्किण्यां घटिकार्थके ।
चकोरे क्रमुके बालकुचे कल्हारके तथा ॥
चातके नालिकेरे च काङ्गुलो युज्यते करः ।

(20) அலபதுமம்
(மலர்ந்த தாமரை)



விரலைந்தும் வளைத்து நீட்டி வேறுவே ருய்ப்பி டித்த
கரம்அல பதுமக் கையாம்; கருதிய வினியோ கங்கேள்;
விரகம்,கண் ணாடி, வட்டம், மேல்வீடு, முலைக ளுக்கும்,
இரதமூர், பூரண சந்திரன், எழிற்குளங் களுக்கு மென்ப. (65)

கொண்டை,கெம் பீரம், கர்வம், கோபம்,கூக் குரல்,ம லர்ந்த
முண்டகப் பூ,க பித்தம் முதலான பழங்க ளுக்கும்,
வண்டில், கொண் டாட்டம், சக்கிர வாகம் என்று ரப்பால்
அண்டிய சதுரக் கையின் அடையாளஞ் சொல்லு கின்றார். (66)

இலக்: *ஐந்து விரல்களையும் வளைத்து நீட்டி வேறு வேருய்ப் பிடித்தல்.*

வினியோ: *விரகம்; கண்ணாடி; வட்டம்; மேல்வீடு; முலை; இரதம்; ஊர்; பூரண சந்திரன்; குளம்.*

*கொண்டை; கம்பீரம்; கர்வம்; கோபம்; கூக்குரல்; மலர்ந்த தாமரைப்பூ; விளா முதலிய கனிகள்; வண்டில் (வண்டி); கொண்டாட்டம்; சக்கரவாகம்.*

குறிப்பு: இலக்: வட. சுலோகம். சுண்டு விரல் தொடங்கி விரல்களை வளைத்து, ஒன்றொடொன்று பிரித்து வைத்தல்.

(२०) अलपद्महस्तः

कनिष्ठाद्या वक्रिताश्च विरलाश्चालपद्मकः ॥

विनियोगः

विकचाब्जे कपित्थादिफले चावर्तके कुचे ।
विरहे मुकुरे पूर्णचन्द्रे सौन्दर्यभावने ॥
धम्मिल्ले चन्द्रशालायां ग्रामे चोद्धृतकोपयोः ।
तटाके शकटे चक्रवाके कलकलारवे ॥
श्लाघने सोऽलपद्मश्च कीर्तितो भरतागमे ।

**(21) சதுரம்**



அங்குட்டம் தனைவ ளைத்துஅ நாமிகை அடியிற் கூட்டித்
தங்குஅநா மிகைமத் திமம்தர்ச் சனிமூன் றுங் கூட்டி நீட்டி
அங்கனிட் டிகைபின் நீட்டில் அந்தக்கை சதுர மாகும்;
இங்கினி வினியோ கங்கள் இயம்பிநு ரிசைவல் லோரே. (67)

கத்தூரி தங்கம் செம்பு காரீயம் இரும்பு கட்டும்
பித்தளை வதனம் வர்ண பேதங்கள் கண்க ளுக்கும்
சத்தியம் இரச பானம் சரசம்நெய் எண்ணெய் மெல்ல
வைத்திடு நடைகள் அச்சம் வருங்கொஞ்சப் பொருட்கும் ஆமே.

இலக்: *கட்டை விரலை வளைத்து, மோதிர விரலின் அடியில் கூட்டி, மோதிர விரல் நடுவிரல் சுட்டு விரல் ஆகிய மூன்றையும் நீட்டிச் சேர்த்து, சுண்டு விரலைப் பின்னே நீட்டல்.*

விநியோ : கத்தூரி ; தங்கம் ; செம்பு ; காரீயம் ; இரும்பு ; பித்தளை ; முகம் ; வர்ண (ஜாதி) பேதங்கள் ; கண்கள் ; சத்தியம் ; ரசபானம் ; சரசம் ; நெய் ; எண்ணெய் ; மெல்ல நடக்கும் நடைகள் ; அச்சம் ; கொஞ்சம் பொருள்கள்.

## (२१) चतुरहस्तः

तर्जन्याद्यास्तत्र श्लिष्टाः कनिष्ठा प्रसृता यदि ॥

अङ्गुष्ठोऽनामिकामूले तिर्यक् चेच्चतुरः करः ।

### विनियोगः

कस्तूर्यां किञ्चिदर्थे च स्वर्णे ताम्रे च लोहके ॥

आर्द्रे खेदे रसास्वादे लोचने वर्णभेदने ।

प्रमाणे सरसे मन्दगमने शकलीकृते ॥

आनने घृततैलादौ युज्यते चतुरः करः ।

(22) பிரமரம் (வண்டு)



மத்திமம் அங்குட்டம் கூட்டி மன்னு தர்ச்சனி வளைத்து
மத்தஇ ரண்டும் நீட்ட வரும்பிர மரக்கை யாகும் ;
சுத்துபி ரமரத் திற்கும் சுகங்கட் கும்கூடு தற்கும்
குத்தமில் சார சங்கள் கோகிலா திகட்கும் தானே. (69)

பிரமரம் - வண்டு. சுகம் - கிளி.

(மற்ற, சுற்று, குற்றம் என்றவை எதுகை நோக்கி மத்த, சுத்து, குத்தம் என்ருயின.)

**இலக்:** நடு விரலையும், கட்டை விரலையும் கூட்டி, சுட்டு விரலை வளைத்து, மற்ற இரண்டு விரல்களையும் நீட்டல்.

**வினியோ:** சுழலும் வண்டு; கிளிகள்; கூடுதல்; சாரசப் பறவை (நாரைவகை), கோகிலம் முதலியவை.

**குறிப்பு:** வடமொழிச் சுலோகத்தில் கூடுதல் என்னுமிடத்தில் பக்ஷ - இறகு என்றிருக்கிறது.

(२२) भ्रमरहस्तः

मध्यमाङ्गुष्ठसंयोगे तर्जनी वक्रिताकृतिः ॥
शेषाः प्रसारिताश्चासौ भ्रमराभिधहस्तकः ।

विनियोगः

भ्रमरे च शुके पक्षे सारसे कोकलादिषु ॥
भ्रमराख्यश्च हस्तोऽयं कीर्तितो भरतागमे ।

**(23) ஹம்ஸாஸ்யம்**
**(அன்னத்தின் அலகு)**



**தர்ச்சனி யுடன்அங் குட்டம் தன்னையே கூட்டி நீட்டி,**
**மிச்சமு விரல்க டன்னை வேறுவே ருக நீட்டி,**
**இச்சமு சாசி யக்கை இயம்பினர்; வினியோ கங்கேள்;**
**நிச்சயம் உபதே சம்கண் ணீர்த்துளி களுக்குந் தானே; (70)**

கைத்தலத் தாலே தாலி கட்டவும் உரைத்த லுக்கும்
சித்திரக் காகி தங்கள் செறிந்தெழு துகிற தற்கும்
கொத்துதல், திரிப ரப்பல், கூர்ந்தெழு புளகங் கட்கும்,
முத்துமல் லிகைமுல் லைப்பூ முதல்மலர் களுக்குந் தானே. (71)

**இலக்:** *சுட்டு விரலுடன் கட்டை விரலைக் கூட்டி நீட்டி, பிற மூன்று விரல்களையும் வேறு வேறாக நீட்டல்.*

**விநியோ:** *உபதேசம்; (அல்லது உபதேச நிச்சயம்); கண்ணீர்த்துளி; (கையாலே) தாலிகட்டுதல்; (செய்தி) உரைத்தல்; சித்திரக் காகிதங்களில் எழுதுதல்; கொத்துதல்; திரி பரப்பல்; (தூண்டுதல்); புளகம்; முத்து; மல்லிகை; முல்லை முதலிய மலர்கள்.*

குறிப்பு: வடமொழிச் சுலோகத்திற் கூறும் விநியோகங்களுள், ஜல பந்தம் - அணை என்றதும் கூறப்பட்டுள்ளது.

## (२३) हंसास्यहस्तः

मध्यमाद्यास्त्रयोऽङ्गुल्यः प्रसृता विरला यदि ॥
तर्जन्यङ्गुष्ठसंश्लेषात् करो हंसास्यको भवेत् ।

### विनियोगः

माङ्गल्ये सूत्रबन्धे च उपदेशविनिश्चये ॥
रोमाञ्चे मौक्तिकादौ च दीपवर्तिप्रसारणे ।
निकषे मल्लिकादौ च चित्रे तल्लेखने तथा ॥
दंशे च जलबन्धे च हंसास्यो युज्यते करः ।



## (24) ஹம்ஸபக்ஷம்
(அன்னத்தின் சிறகு)

ஓதியசர்ப் பசிரங் தன்னில் ஒருகனிட் டிகையை நீட்டில்
ஈதம்ச பட்சக் கையாம் ; இதற்கினி வினியோ கங்கேள் ;
சேதுபந் தனங்க ளுக்கும் தேகத்தின் நகக்கு றிக்கும்,
மாதுகேள் ; ஆறி லக்கம் வாகனங் களுக்கும் தானே. (72)

இலக் : *சர்ப்ப சிரக்கையில் சுண்டு விரலை நீட்டல்.*

விநியோ: *சேது பந்தனம், (பாலம்); உடலில் இடப்பெறும் நகக்குறி ; ஆறு என்னும் எண் ; வாகனங்கள்.*

குறிப்பு : *வடமொழிச் சுலோகத்திலுள்ள பிதானே என்ற பதத்தை வாகனே என்று கொண்டனர் போலும்.*

### (२४) हंसपक्षहस्तः

सर्पशीर्षकरे सम्यक् कनिष्ठा प्रसृता यदि ॥
हंसपक्षः करः सोऽयं तन्निरूपणमुच्यते ।

### विनियोगः

षट्संख्यायां सेतुबन्धे नखरेखाङ्कने तथा ॥
पिधाने हंसपक्षोऽयं कथितो भरतागमे ।



(25) ஸந்தம்சம் (கிடுக்கி)

விடுத்தப துமகோ சத்தில் விரலைந்தும் வெவ்வே றாக
அடிக்கடி பரப்பிக் கூட்டில் அதுதான்சந் தம்ச மாகும்;
கொடுப்பது பலிதா னங்கள் கூறுமர்ச்ச னைஐந் திற்கும்
மடிபுழு விரணங் கட்கும் மனப்பயங் களுக்கும் தானே. (73)

இலக்: பதுமகோசக் கையில் ஐந்து விரல்களையும் சடுதி சடுதியாகப் (பிரித்துப்) பரப்பிக் கூட்டல்.

விநியோ: பலிதானங்கள் கொடுப்பது; அர்ச்சனை; ஐந்து என்னும் எண்; வயிறு; புழு; புண்கள்; (பெரும்) பயம்.

(பி-ம்.) 4. அடுப்புழு; அடுப்புள். பிராணங் கட்கும்.

(२५) सन्दंशहस्तः

पुनः पुनः पद्मकोशः संश्लिष्टो विरलो यदि ॥
सन्दंशाभिधहस्तोऽयं कीर्तितो नृत्यकोविदैः ।

विनियोगः

उदरे बलिदाने च व्रणे कीटे महाभये ॥
अर्चने पञ्चसंख्यायां सन्दंशाख्यो नियुज्यते ।



## (26) முகுளம் (மொட்டு)

விரல்நுனி ஐந்தும் கூட்டி மின்னுங்கை முகுள மாகும்;
பரிவுறு போச னங்கள், பஞ்சபா ணங்க ளுக்கும்,
வருநீல மலர், உந் திக்கும், வாழைப்பூ விற்கு மென்ப
தருபுகழ் முத்தி ராதி தாரணத் துக்கும் தானே. (74)

இலக்: *ஐந்து விரல்களின் நுனிகளையும் கூட்டுதல்.*

விநியோ: *போஜனம்; (மன்மதனின்) பஞ்ச பாணங்கள். நீலோற்பலம்; தொப்புள்; வாழைப்பூ; முத்திரை முதலியன தரித்தல்.*

### (२६) मुकुलहस्तः

अङ्गुलीपञ्चकं चैव मेलयित्वा प्रदर्शने ॥
मुकुलाभिधहस्तोऽयं कीर्त्यते भरतागमे ।

### विनियोगः

कुमुदे भोजने पञ्चबाणे मुद्रादिधारणे ॥
नाभौ च कदलीपुष्पे युज्यते मुकुलः करः ।


1



2

## (27) தாம்ர சூடம் (சிவப்புக்கொண்டை-கோழி)

தாங்கிய முகுளம் தன்னில் தர்ச்சனி தனைவ ளைத்தால்
ஆங்கது தாம்பிர சூடம்; அதற்கினி வினியோ கங்கேள்;
ஓங்கிய கோழி காக்கை ஓலையி லெழுது தற்கும்
பாங்குறும் ஓர்பூ விற்கும் பாலர்க ளுக்கும் தானே. (75)

இலக்: *முகுளக்கையில் சுட்டு விரலை வளைத்தல்.*

வினியோ: *கோழி; காக்கை; ஓலையில் எழுதுதல்; ஒரு பூ; பாலர்.*

குறிப்பு: *பிற வினியோகங்கள்: கொக்கு, ஒட்டகம்; பேனா, கன்று. தமிழ்ச் செய்யுளில் பாங்குறும் ஓர் பூவிற்கும் என்பதற்கு வேறு பாடம் கிடைப்பின் நலமாகும். படங்களில் (1) இலக்கணப்படியும், (2) சம்பிர தாயப்படியும் உள்ளன.*

### (२७) ताम्रचूडहस्तः

मुकुले ताम्रचूडः स्यात्तर्जनी वक्रिता यदि ॥

### विनियोगः

कुक्कुटादौ बके काके उष्ट्रे वत्से च लेखने ।
युज्यते ताम्रचूडाख्यः करो भरतवेदिभिः ॥



## (28) திரிசூலம்

வருகனிட் டிகைஅங் குட்டம் வளைத்துமூ விரலை நீட்டில்
திரிசூலக் கைஅ தற்குச் செப்பினர் வினியோ கங்கேள் ;
திரிசூல பரவத் துக்கும் திரிசூலத் துக்கும் தானென்
றறிஅர்த்த சூசி யங்கையைச் சொல்கின் றுரே. (76)

இலக் : *சுண்டு விரலையும் கட்டை விரலையும் வளைத்து, (மற்ற) மூன்று விரல்களையும் நீட்டல்.*

வினியோ : *திரிசூல பரவஸ்து (சிவபெருமான்) ; திரிசூலம்.*

குறிப்பு : *4 ஆம் அடி குறைந்திருக்கிறது. மகாபரத சூடாமணியில் இப்பாடலின் கடைசி இரண்டடிகள் பின் வருமாறு அமைந்துள்ளன :*

திரிபுர சிகரம் வில்வத் தழைதிரி சூலத் துக்கும்
திரிமூர்த்தி யென்ன நந்தி செப்பின கையி தாமே.

## (२८) त्रिशूलहस्तः

निकुञ्चनयुताङ्गुष्ठकनिष्ठस्तु त्रिशूलकः ।

### विनियोगः

बिल्वपत्रे त्रित्वयुक्ते त्रिशूलकर ईरितः ॥



## (29) வியாக்ரம் (புலி)

**மிருகசீ ரிடக்கை தன்னில் மேவிய கனிட்டாங் குட்டம்**
**நிறைசமா னங்க ளாக நீட்டவே வியாக்கிர அத்தம் ;**
**மிருகரா சன்,மண் டூகம், விளங்கிய முத்துச் சிப்பி,**
**வெறிதரு குரங்கு கட்கும், வியாக்கிரக் கைசொன் னரே. (77)**

**இலக் :** *மிருகசீரிடக் கையில் சுண்டு விரலையும் கட்டை விரலையும் சமமாக நீட்டல்.*

குறிப்பு : இவ்விரு விரல்களையும் வளைத்தல் என்று வடமொழிச் சுலோகம் கூறும்.

**விநியோ :** *மிருகராசன் (இங்குப் புலி) ; தவளை ; முத்துச் சிப்பி ; குரங்கு.*

குறிப்பு : வியாக்கிரம், அர்த்த சூசி என்ற இரண்டு கைகளும் முன் குறித்த 28 கைகள் வகைக்குட்பட்டவை அல்ல. இவை மதாந்தரங்கள். ஒற்றைக் கைகளின் எண்கள் அவற்றின் முறை முதலியனவும், நூலுக்கு நூல் மாறியுள்ளன.

இவ்வியாக்ர ஹஸ்தத்தை ஊர்ணநாப ஹஸ்தம் என்றும்சிலர் கூறுவர். இதனை, விரல்களுக்கு இடையே வெளி அமையும்படி பிரித்தும் காட்டுவர்.

### (२९) व्याघ्रहस्तः

कनिष्ठाङ्गुष्ठनमने मृगशीर्षकरे तथा ।
व्याघ्रहस्तः स विज्ञेयो भरतागमकोविदैः ॥

### विनियोगः

व्याघ्रे भेके मर्कटे च शुक्तौ संयुज्यते करः ।



(30) அர்த்த சூசி

இருங்கபித் தக்கை தன்னில் இலங்குதர்ச் சனியை நீட்டத்
தெரிந்திடும் அர்த்தசூசி; செப்பினர் வினியோ கங்கேள்;
பெரும்புழு முளைக ளுக்கும் பேசினர் சூசி யத்தம்
திருந்தவும் இரண்டு கையுஞ் சேர்த்திடு வகைசொல்வாரே.
(78)

இலக்: *கபித்தக் கையில் சுட்டு விரலை (மேலே) நீட்டுதல்.*

வினியோ: *பெரிய புழு; முளை.*

(பி-ம்.) *1. பெரும்புழு முளைகளுக்கும் பேசிய பட்ச பாதம்.*

*இதனுடன் ஒரு கையாலே பிடிக்கிற வகை முற்றும்.*

(३०) अर्धसूचीहस्तः

कपित्थे तर्जनी ऊर्ध्वसारणे त्वर्धसूचिकः ॥

विनियोगः

अङ्कुरे पक्षिशावादौ बृहत्कीटे नियुज्यते ।

ஒற்றைக் கைவகை முற்றும்

---

*அப்பாலிரண்டு கையுங்கூட்டிப் பிடிக்கிற வகை சொல்லுகிறார்.*

## 5. ஸம்யுத ஹஸ்தங்கள்

### இரட்டைக்கை வகை

**அஞ்சலி கபோதம் நீள்கற் கடகத் துடன்சு வத்திகம்,**
**கொஞ்சிய டோளம் புட்ப புடத்தோடு சங்க வத்தம்,**
**அம்சிவ லிங்கம் கடகா வர்த்தன வத்தம் தூய**
**வஞ்சியே கர்த்த ரீசு வஸ்திகம், சகடம் என்பர். (79)**

**பொங்குசங் குசக்கரம் சம்புடம் பாசம் கீல கந்தான்,**
**மங்கையே மச்சம்கூர் மம்,வராகம் நீளக் கருட வத்தம்,**
**தங்கிய நாக பந்தம், தகைசேர் கட்வ வத்தம்,**
**இங்கெழில் பேருண்டத் தோடு, இருபத்து மூன்று கையே. (80)**

*இரட்டைக் கைகள் இருபத்து மூன்று: அவை—1. அஞ்சலி; 2. கபோதம்; 3. கற்கடம்; 4. ஸ்வஸ்திகம்; 5. டோளம்; 6. புஷ்பபுடம்; 7. (உத்) சங்கம்; 8. சிவலிங்கம்; 9. கடகா வர்த்தனம்; 10, கர்த்தரி ஸ்வஸ்திகம்; 11. சகடம்; 12. சங்கம்; 13. சக்கரம்; 14. சம்புடம்; 15. பாசம்; 16. கீலகம்; 17. மத்ஸ்யம்; 18. கூர்மம்; 19. வராகம்; 20. கருடன்; 21. நாகபந்தம்; 22. கட்வம்; 23. பேருண்டம்.*

## ५. संयुतहस्ताः

अञ्जलिश्च कपोतश्च कर्कटः स्वस्तिकस्तथा ।
डोलाहस्तः पुष्पपुट उत्सङ्गः शिवलिङ्गकः ॥
कटकावर्धनश्चैव कर्तरी स्वस्तिकस्तथा ।
शकटं शङ्खचक्रे च संपुटः पाशकीलकौ ॥
मत्स्यः कूर्मो वराहश्च गरुडो नागबन्धकः ।
खट्वा भेरुण्ड इत्येते संख्याताः संयुताः कराः ॥
त्रयोविंशतिरित्युक्ताः पूर्वगैर्भरतादिभिः ।



(1) அஞ்சலி (வணக்கம்)

விஞ்சைசேர் பதாக மாக இருகையும் கூட்டிக் கொண்ட(து)
அஞ்சலி அத்த மாகும்; அதற்கினி வினியோ கங்கேள்;
மிஞ்சு தெய்வம், குருக்கள், வேதியர்க் கும்நமக் காரம்,
அஞ்சிர வதனம், செங்கை ஆய்முறை பிடியென் றுரே. (81)

இலக்: *இரண்டு கைகளையும் பதாகங்களாக்கி அவற்றைக் கூட்டிக் கொள்ளுதல்.*

வினியோ: *அஞ்சலிக்கையைச் சிரத்திலும், முகத்திலும் வைக்க, முறையே தெய்வங்கள், குருக்கள், வேதியர் இவர்களுக்குச் செய்யும் நமஸ்காரங்களுக்காகும். இவற்றைத் தலை, முகம் ஆகுமிடங்களில் பிடிக்கவேண்டிய முறையில் பிடிக்க.*

குறிப்பு: *வடமொழிச் சுலோகத்தில் தலை, முகம், மார்பு என்று மூன்று இடங்கள் குறிக்கப்படுகின்றன. மகாபரத சூடாமணியில், தலைமீது 12 அங்குலம் உயரப் பிடித்துச் சிவபெருமானையும், தலைமீது தேவரையும், நெற்றிக்கு நேரே ஆசானையும், வாயின் நேரில் பிதாவையும், மார்புக்கெதிரே அந்தணரையும், இடை உந்தியில் மாதாவையும் அஞ்சலி செய்க, என்று குறிப்பிட்டிருக்கிறது.*

(१) अञ्जलिहस्तः

पताकातलयोर्योगादञ्जलिः कर ईरितः ।

विनियोगः

देवतागुरुविप्राणां नमस्कारेष्वनुक्रमात् ॥
कार्यः शिरोमुखोरस्थो विनियोगेऽञ्जलिर्बुधैः ।



(2) கபோதம் (புரு)

அஞ்சலி அத்தந் தன்னில் அடிநுனி பக்கமி ரண்டும்
கொஞ்சமுன் வெளியாய்க் கூட்டிக் கொள்ளவே கபோத வத்தம்;
மிஞ்சிய சத்தி யச்சொல், மெய்க்குரு வுடனே பேசல்,
அஞ்சிய விநயம் பேசல் ஆமெனும் பேசற் காகும். (82)

**இலக் :** *அஞ்சலிக் கையில் அடி, நுனி, இரண்டு பக்கங்கள் (ஆகியவை) சிறிது உள்வெளியாய்க் கூட்டிக் கொள்ளல். (இருகைகளும் அடிகளிலும், பக்கங்களிலும், நுனிகளிலும் மட்டும் கூடுதல்.)*

**விநியோ :** *சத்தியச் சொல், (ஆணையிடல்); குருவுடன் பேசல்; விநயமாய்ப் பேசல்; 'ஆம்' என்று பேசல்.*

குறிப்பு : *சத்தியச் சொல் 'என்னுமிடத்தில் ப்ரணமே - வணக்கம்' என்று வடமொழிச் சுலோகம் குறிக்கிறது; ப்ரமாணே என்று தமிழ் மொழிபெயர்ப்பாளர் கொண்டனர் போலும்.*

(२) कपोतहस्तः

कपोतोऽसौ करो यत्र श्लिष्टाऽऽमूलाग्रपार्श्वकः ॥

विनियोगः

प्रणामे गुरुसम्भाषे विनयाङ्गीकृतेष्वयम् ।



(3) கற்கடம் (நண்டு)

அஞ்சலி அத்தந் தன்னில் அடர்ந்திடு விரல்கள் பத்தும்
மிஞ்சவொன் றிடையி லொன்ருய் இருபுறங் கையில்வ ளேக்க
விஞ்சைகற் கடக வத்தம்; விளம்பினர் வினியோ கங்கேள்;
வஞ்சியே! கூட்ட மாக வருவதற் கெல்லாம் என்ப; (83)

பரியது காட்டு தற்கும், பருங்கொப்பு வளைப்ப தற்கும்,
உரியசங் கூது தற்கும், உடல்பிடித் திடுவ தற்கும்,
தெரிகற்க டக்கை என்று செப்பினர்; அப்பால் நீடு
கரியபூங் குழலாய்! சுவத்தி கந்தனைச் சொல்கின் றுரே. (84)

கற்கடம்

**இலக்:** *அஞ்சலிக் கையிலுள்ள பத்து விரல்களையும் ஒன்றின் இடையில் மற்ருென்ருக அமைத்து, இரு புறங்களும் (விரல்கள் உள்ளேயும், புறத்திலேயும் இருக்கக்) கையை வளைத்தல்.*

**விநியோ:** *கூட்டமாக வருவன எல்லாம்; பருத்த வஸ்துக்களைக் காட்டுதல்; பெரிய மரக்கிளையை வளைத்தல்; சங்கு ஊதுதல்; உடல் பிடித்தல்.*

(३) कर्कटहस्तः

अन्योन्यस्यान्तरे यत्राङ्गुल्यो निःसृत्य हस्तयोः ॥
अन्तर्बहिर्वा वर्तन्ते कर्कटः सोऽभिधीयते ।

विनियोगः

समूहागमने तुन्ददर्शने शङ्खपूरणे ॥
अङ्गानां मोटने शाखोन्नमने च नियुज्यते ।



(4) ஸ்வஸ்திகம் (குறுக்கிட்டது)

தனித்திடு பதாகம் இரண்டும் கணுக்கையிற் குறுக்கே கூட்டி,
நுனிக்கையி ரண்டு மேலே நீட்டி, உள் ளங்கை இரண்டும்,
பிணக்கற முகத்தின் நேரே பிடிக்கவே சுவத்தி கக்கை;
இணக்கமாம் சுவத்தி கத்திலே மகரம் வினியோகந் தானே.
(85)

குறிப்பு: மகாபரத சூடாமணியில் இச்செய்யுளின் நான்காம் அடி, 'இணக்கமாம் பயத்துந் தோத்ர மியம்பினர் வினியோ கந்தான்' என்று காணப்படுகிறது.

**இலக்:** இரண்டு பதாகக் கைகளைக் கணுக்கையிடத்தில் குறுக்கே அமைத்து, இரண்டு கை நுனிகளையும் மேலே நீட்டி, உள்ளங்கைகள் இரண்டும் முகத்தின் நேரே இருக்குமாறு பிடித்தல்.

குறிப்பு: இரண்டு பதாகக் கைகளைக் கணுக்கையிடத்தில் குறுக்கே வைத்தல் என்பது சுலோகக் குறிப்பு.

**வினியோ:** மகரம் (முதலை).

(४) स्वस्तिकहस्तः

पताकयोः सन्नियुक्तः करयोर्मणिबन्धयोः ॥
संयोगेन स्वस्तिकाख्यो

विनियोगः

मकरे विनियुज्यते ।



(5) டோளம் (ஊஞ்சல்)

அடவுறு பதாகம் இரண்டும் அடித்துடை களுக்கு நேராய்
இடம்வலம் இருபக் கத்தும் இருகையும் தொங்க நீட்டில்
திடமுறு டோள வத்தம் செப்பினர் ; வினியோ கங்கேள் ;
நடனவா ரம்பத் திற்கும் நாட்டியே பிடியென் றுரே. (86)

**இலக் :** *இரண்டு பதாகக் கைகளையும் தொங்கலாக இடம் வலமாகிய இரண்டு அடித்தொடைகளுக்கும் நேரே தொங்க நீட்டல்.*

**வினியோ :** *நடன ஆரம்பம்.*

(५) डोलाहस्तः

पताक ऊरुदेशस्थे डोलाहस्तोऽयमिष्यते ।

विनियोगः

नाट्यारम्भे प्रयोक्तव्य इति नाट्यविदो विदुः ॥

(6) **புஷ்பபுடம்** (மலர்க்கூடை)



**சர்ப்பசீ ரிடக்கை இரண்டும் தகுகனிட் டிகைப்பக் கத்தில்**
**பொற்பொடு கூட்டில் புட்ப புடக்கையாம்; வினியோ கங்கேள்;**
**நற்புதல் வர்கள், சீரார் நீராஞ்சனம், கிழங்கு, மந்திர**
**புற்பங்கள், அர்க்கிய தானம், புகழ்கனி வாங்கத் தானே.** (87)

**இலக்:** *இரண்டு சர்ப்பசிரிடக் கைகளைச் சுண்டுவிரல்களின் பக்கமாகச் சேர்த்தல்.*

*பொற்பு-அழகு.*

**வினியோ:** *நல்ல புதல்வர்; நீராஞ்சனம் (கற்பூரம் காட்டல்); கிழங்கு; மந்தர புஷ்பம்; அர்க்கியதானம்; கனிகள் வாங்குதல்.*

**குறிப்பு:** *இன்னும் வினியோகங்கள்: மாலைநேரம்; நீரெடுத்தல்.*

(६) पुष्पपुटहस्तः

संश्लिष्टकरयोः सर्पशीर्षः पुष्पपुटः करः ।

विनियोगः

नीराजनविधौ वारिफलादिग्रहणेऽपि च ।
सन्ध्यायामर्घ्यदाने च मन्त्रपुष्पे च युज्यते ॥



(7) உத்ஸங்கம் (அணைவு)

ஏலவும் மிருக சீருஷம் இருகையும் இருதோள் நேரே
கோலியே பிடித்ததுஉத் சங்கம் ; கூறினர் வினியோ கங்கேள் ;
ஆலிங்க னம்,நா ணம்,க டகங்கள் தொடவும், சின்னம்
பாலர்கள் தனைச்சிட் சிக்க, பகர்ந்தா ருத்சங்கந் தானே. (88)

இலக் : *இரு மிருகசீருஷக் கைகளை (எதிரெதிர்)* இரு தோள் களைத் தொட்டு *வளைத்துப் பிடித்தல்.*

வினியோ : *ஆலிங்கனம் ; நாணம் ; கடகங்களைத் தொடுதல் ; சிறிய பிள்ளைகளுக்குக் கற்பித்தல்.*

(७) उत्सङ्गहस्तः

अन्योन्यबाहुदेशस्थौ मृगशीर्षकरौ यदि ।
उत्सङ्गहस्तः स ज्ञेयो भरतागमवेदिभिः ॥

विनियोगः

आलिङ्गने च लज्जायामङ्गदादि प्रदर्शने ।
बालानां शिक्षणे चायमुत्सङ्गो युज्यते करः ॥

(8) சிவலிங்கம்



தகுமிடக் கையில் அர்த்த சந்தரக்கை பிடித்த தன்மேல்
சிகரத்தை வலக்கை தன்னிற் சேர்த்துஇடக் கைமேல் வைத்தால்
அகமகிழ் சிவலிங் கக்கை யாம்,அதன் வினியோ கங்கேள் ;
புகழ்சிவ லிங்கத் திற்கே புகன்றனர் பரதத் தோரே. (89)

இலக் : *இடக்கையில் அர்த்த சந்திரக் கையைப் பிடித்து, அவ்விடக்கைமீது வலக்கையில் பிடித்த சிகரக் கையைச் சேர்த்தல்.*

வினியோ : *சிவலிங்கம்.*

குறிப்பு : முதல் வரியில் ' அடியதன்மேல் ' என்று மகாபரத சூடாமணியில் உள்ளது.

(८) शिवलिङ्गहस्तः

वामेऽर्धचन्द्रो विन्यस्तः शिखरः शिवलिङ्गकः ।

विनियोगः

विनियोगस्तु तस्यैव शिवलिङ्गस्य दर्शने ॥



(9) கடகாவர்த்தனம்

கடகாமு கக்கை இரண்டும் கணுக்கையிற் குறுக்கே கூட்டில்
கடகாவர்த் தனம தென்றே கையாகும் ; வினியோ கங்கேள் ;
திடமன்னர் மகிழ்பட் டாபி டேகம்,பூ சைகள்,கல் யாணத்
திடைஅறு கிடவும், மேலா சீர்வாதஞ் செயவும் ஆமே. (90)

**இலக் :** *இரண்டு கடகாமுகக் கைகளைக் கணுக்கைகளிடத்தில் குறுக்கே (ஸ்வஸ்திகமாகக்) கூட்டல்.*

**வினியோ :** *மன்னர் பட்டாபிஷேகம் : பூசை ; கலியாணத்தில் அறுகு இடல் ; ஆசிர்வாதம்.*

(९) कटकावर्धनहस्तः

कटकामुखयोः पाण्योः स्वस्तिको मणिबन्धयोः ।
कटकावर्धनाख्यः स्यादिति नाट्यविदो विदुः ॥

विनियोगः

पट्टाभिषेके पूजायां विवाहादिषु युज्यते ।



(10) கர்த்தரீஸ்வஸ்திகம்
(குறுக்குக் கத்திரிக்கோல்)

கர்த்தரி முகக்கை இரண்டும் கணுக்கையிற் குறுக்கே நீட்டில்
கர்த்தரி சுவத்தி கத்தின் கையென்றார் ; வினியோ கங்கேள் ;
விர்த்திசேர் மலைகள், கொம்பு, விருக்ஷங்க ளுக்கும், ஆகும்
கர்த்தரி சுவத்தி கக்கை காணென்றார் கரணத் தோரே. (91)

குறிப்பு : *இச் செய்யுளின் நான்காமடி மகாபரத சூடாமணியில், 'பத்தி யாய்ப் பலக லைக்கூட் டங்களும் பகர லாமே' என்று காணப்படுகிறது.*

**இலக் :** *இரண்டு கர்த்தரிமுகக் கைகளைக் கணுக்கையிற் குறுக்கே கூட்டல்.*

**விநியோ :** *மலைகள் ; (சிகரங்கள்) ; கிளைகள் ; மரங்கள்.*

(१०) कर्तरीस्वस्तिकहस्तः

कर्तरी स्वस्तिकाकारा कर्तरी स्वस्तिको भवेत ।।

विनियोगः

शाखासु चाद्रिशिखरे वृक्षेषु च नियुज्यते ।



(11) சகடம் (வண்டி)

வருபிர மரக்கை தன்னில் மத்திமாங் குட்டம் விட்டு
நிரவியே பரப்பி நீட்டில் நிகழ்த்தினர் சகட வத்தம்;
தருவினி யோகங் கேளாய்; சகடுக்கும் ராக்ஷ தர்க்கும்
மருவிய சகட மென்றே வழுத்தினர் பரதத் தோரே. (92)

இலக்: *பிரமரக் கையில் நடுவிரலையும் கட்டை விரலையும் நிரவிப் பரப்பி நீட்டுதல்.*

விநியோ: *வண்டி; இராக்கதர் (அபிநயம்).*

(११) शकटहस्तः

भ्रमरे मध्यमाङ्गुष्ठप्रसाराच्छकटो भवेत् ॥

विनियोगः

राक्षसाभिनये प्रायः शकटो विनियुज्यते ।



(12) சங்கம் (சங்கு)

**வலக்கையின் சிகரத் துள்ளே வாமாங் குட்டஞ் சேர்த்து**
**நிலேத்தநால் விரலும் பின்னே நீட்டியே கூட்டிப் பின்னும்**
**வலக்கைஅங் குட்டங் கூட்டி மன்னுங்கை சங்க மாகும்;**
**கலக்கமில் வினியோ கம்சங் காதிகட் காகுந் தானே. (93)**

**இலக்:** *வலக்கையின் சிகரத்துள்ளே, இடக்கையின் கட்டை விரலேச் சேர்த்தும் அதன் மற்ற நான்கு விரல்களேப் பின்புறமாக நீட்டிக் கூட்டி, பிறகு வலக்கைக் கட்டை விரலே யும் கூட்டிப் பிடித்தல்.*

**வினியோ :** *சங்கு முதலானவை.*

(१२) शङ्खहस्तः

शिखरान्तर्गताङ्गुष्ठ इतराङ्गुष्ठसङ्गतः ॥
तर्जन्या युत आश्लिष्टः शङ्खहस्तः प्रकीर्तितः ।

विनियोगः

शङ्खादिषु प्रयोज्योऽयमित्याहुर्भरतादयः ॥

(13) சக்கரம் (சக்கராயுதம்)



அர்த்தசந் திரனி ரண்டு அத்தத்தி லும்பி டித்தே
யுத்தியாய் ஒருகை மேலே ஒருகையைக் குறுக்கே நீட்டி
வைத்தது சக்க ரக்கை; வழுத்தினர் விநியோ கங்கேள்;
தத்தையே! சக்க ராயு தங்களுக் காமென் றோதே. (94)

**இலக்:** *இரண்டு கைகளிலும் அர்த்த சந்திரக் கைகளைப் பிடித்து, ஒரு கை மேலே மற்றொரு கையைக் குறுக்கே வைத்தல்.*

**விநியோ:** *சக்கராயுதங்கள்.*

*தத்தையே — விளி.*

(१३) चक्रहस्तः

यत्रार्धचन्द्रौ तिर्यञ्चावन्योन्यतलसंस्पृशौ ।
चक्रहस्तः स विज्ञेय-

विनियोगः

श्चक्रार्थे विनियुज्यते ॥



(14) சம்புடம் (செப்பு)

விடுத்தசக் கரத்தில் பத்து விரல்நுனி வளைத்திட் டாற்சம்
புடக்கையா மென்ற தற்குப் புகன்றனர்; வினியோ கங்கேள்;
எடுத்தவஸ் துக்க ளெல்லா மின்பமாய் மூடு தற்கும்,
புடைத்தெழு முலையாய்! கேள்; சம் புடத்துக்கு மாமென் றுரே.
(95)

இலக்: *சக்கரக் கையில் பத்துவிரல் நுனிகளையும் வளைத்தல்.*

வினியோ: *எடுத்த பொருள்களையெல்லாம் மூடிவைத்தல்; சம்புடம்.*

(१४) सम्पुटहस्तः

कुञ्चिताङ्गुलयश्चक्रे प्रोक्तः सम्पुटहस्तकः ।

विनियोगः

वस्त्वाच्छादे सम्पुटे च सम्पुटः कर ईरितः ॥



**(15) பாசம்**
(கயிறு)

**இருகையுஞ் சூசி யாக்கி இருதர்ச்ச னியும்வ ளைத்துத்
திருகியொன் றேடொன் றுகச் சேர்த்துஇரு விரலும் மாட்டில்
வருமது பாச வத்த மாகும்;நீள் விநியோ கங்கேள் ;
ஒருபாசம், விலங்கும், ஆண்பெண் ணென்றுய்ச்சே ருதற்குந் தானே.**
**(96)**

**இலக் :** *இரு கைகளிலும் சூசிக்கை பிடித்து, அவற்றுள் இரு சுட்டு விரல்களையும் (உள்) வளைத்துத் திருகி, இரு கைகளையும் முறுக்கலாக ஒன்றேடொன்று சேர்த்து, இரு (சுட்டு) விரல்களையும் மாட்டுதல்.*

**விநியோ :** *கயிறு ; விலங்கு; ஆண் பெண் புணர்ச்சி.*

(१५) पाशहस्तः

सूच्यां निकुञ्चिते श्लिष्टे तर्जन्यौ पाश ईरितः ।

विनियोगः

अन्योन्यकलहे पाशे शृङ्खलायां नियुज्यते ॥



(16) கீலகம்
(பிணிப்பு)

மிருகசீ ரிடத்தில் சுண்டு விரலிரண் டையும்வ ளைத்து
இறுகவே ஒன்றோ டொன்றாய் எதிரெதிர் மாட்டி ஆங்கே
அரியவாம் கீலகக்கை ; ஆமதன் வினியோ கங்கேள் ;
நிறைசிநே கங்கட் கென்று நிகழ்த்தினர் பரதத் தோரே (97)

**இலக் :** *இரு கைகளிலும் பிடித்த மிருகசிரிடக் கைகளில் இரண்டு சுண்டு விரல்களையும் (உள்) வளைத்து, ஒன்றோடொன்று எதிரெதிராக இறுக மாட்டல்.*

**விநியோ :** *நிறைந்த நட்புக்கள்.*

(१६) कीलकहस्तः

कनिष्ठे कुञ्चिते श्लिष्टे मृगशीर्षस्तु कीलकः ।

विनियोगः

स्नेहे नर्मानुलापे च कीलको विनियुज्यते ॥



(17) மத்ஸயம் (மீன்)

இச்சையாய் வலக்கை தன்னை இடக்கையின் புறத்தின் மேலே
வைச்சிரு நுனியுநீட்டி வருகனிட் டிகையங் குட்டம்
மிச்சமாம் விரல்கள் நாலும் வெளிப்பட வேறே நீட்டில்
மச்சமாம் ; வினியோகந்தான், மச்சத்துக் கேசொன் னரே.
(98)

இலக் : *வலக்கையை இடக்கையின் புறத்தின்மேலே வைத்து, விரல்களைநீட்டிச் சுண்டு விரல், கட்டை விரல் இவற்றைப் (பக்கங்களிலே) வெளிப்பட நீட்டி, வைத்தல்.*

வினியோ : *மீன். மச்சம் – மீன்.*

குறிப்பு : *படத்திற் காட்டியது சம்பிரதாயத்திலுள்ளது.*

(१७) मत्स्यहस्तः

करपृष्ठोपरि न्यस्तो यत्र हस्तस्त्वधोमुखः ।
किञ्चित्प्रसारिताङ्गुष्ठ कनिष्ठो मत्स्यनामकः ॥

विनियोगः

एतस्य विनियोगस्तु सम्मतो मत्स्यदर्शने ।

(18) கூர்மம் (ஆமை)



கதிர்நிகர் சக்க ரத்தின் கனிட்டிகாங் குட்ட நாலும்
விதமுடன் நீட்டிமற்ற விரலெலாம் வளைத்துக் கொண்டால்
அதுதானே கூர்ம அத்த மாம், என்றூர்; வினியோ கங்கேள்;
விதியினுற் கூர்மத் திற்கே விளம்பினர் பரதத் தோரே (99)

இலக்: *சக்கரக் கையின் சுண்டு விரல்கள், கட்டை விரல்கள் என்ற நான்கையும் நீட்டி, மற்ற விரல்கள் எல்லாவற்றையும் வளைத்துக் கொள்ளுதல்.*

வினியோ: *ஆமை.*

(१८) कूर्महस्तः

कुञ्चिताग्राङ्गुलिश्चक्रे त्यक्ताङ्गुष्ठकनिष्ठकः ॥
कूर्महस्तः स विज्ञेयः

विनियोगः
कूर्मार्थे विनियुज्यते ।



(19) வராகம் (பன்றி)

மிருகசீ ரிடக்கை இரண்டும் மேவியொன் றின்மேல் ஒன்ருய்ப்
புறங்கை யிரண்டும் மேலாய்ப் பிடித்தங்குட் டகனிட் டங்கள்
திறமொடு நாலும் வேருய்த் தெரியவே நன்ருய் நீட்டி
அறி,வ ராகக் கை ;வினி யோகமும் வராகத் துக்காமே. (100)

இலக் : *இரண்டு மிருகசிரிடக் கைகளை, ஒன் றின் மேல் ஒன்ருய்ப் புறங்கைகள் மேலாய் வரும்படி வைத்து, கட்டை விரல்கள், சுண்டு விரல்கள் ஆகிய நான்கும் நன்ருகத் தெரியும் படி நீட்டல்.*

வினியோ : *பன்றி.*

(१९) वराहहस्तः

मृगशीर्षे त्वन्यतरे स्वोपर्येकः स्थिते यदि ॥
कनिष्ठाङ्गुष्ठयोर्योगाद्वराहकर ईरितः ।

विनियोगः

एतस्य विनियोगः स्याद्वराहार्थप्रदर्शने ॥



(20) கருடன்

இருகையு மர்த்த சந்திர னிருகணுக் கைக்கு றுக்காம்
மருவிஅங் குட்டம் இரண்டும் மன்னவே யொன்றுய்க் கூட்டிப்
பிரியமாய் முகத்தின் நேரே பிடித்திடிற் கருடவத்தம் ;
கருதிய வினியோ கந்தான் கருடனுக் கேசொன் ஞரே. (101)

இலக் : *அர்த்த சந்திரக் கைகள் இரண்டினைக் கணுக்கை களிடத்தில் குறுக்கே வைத்து, அவற்றின் கட்டை விரல்களை ஒன்ருேடொன்று பொருந்தச் சேர்த்து, முகத்தின் நேரே பிடித்தல்.*

வினியோ : *கருடன்.*

(२०) गरुडहस्तः

तिर्यक्तलस्थितावर्धचन्द्रावङ्गुष्ठयोगतः ।
गरुडहस्त इत्याहुः

विनियोगः

गरुडार्थे नियुज्यते ॥



(21) நாக பந்தம் (பாம்பின் கட்டு)

கணித்திடு சர்ப்ப சிரசக் கையிரு கையும்பி டித்து
இணக்கமாய்ச் சுவத்தி கம்போ லிருகையுங் குறுக்கே நீட்டிப்
பிணைந்திடில் இதுவே நாக பந்தமாம் ; வினியோ கங்கேள் ;
பணைத்தெழு முலையாய் ! நாக பந்தத் துக்குத் தானே. (102)

இலக் : *இரு கைகளிலும் சர்ப்ப சிரங்களைப் பிடித்து, அவற்றைச் சுவத்திகம் போல் குறுக்கே வைத்துப் பிணைத்தல்.*

வினியோ : *நாகபந்தம்.*

(२१) नागबन्धहस्तः

सर्पशीर्षस्वस्तिकञ्च नागबन्ध इतीरितः ।

विनियोगः

एतस्य विनियोगस्तु नागबन्धे हि सम्मतः ॥



(22) கட்வா (கட்டில்)

சதுரக்கை இரண்டு கையில் தருமிரு நுனியுங் கூட்டி
அதனில்தர்ச் சனிகள் இரண்டும் அங்குட்டம் இரண்டும் நீட்டில்
இதுகட்டு வக்கை யென்றே இயம்பினர் ; வினியோ கங்கேள் ;
மெதுவுறுங் கட்டி லுக்கே விளம்பினர் பரதத் தோரே. (103)

இலக் : *இரண்டு சதுரக் கைகளின் நுனிகளைக் கூட்டி, அவற்றில் சுட்டுவிரல்களையும் கட்டை விரல்களையும் நீட்டல்.*

வினியோ : *கட்டில்.*

குறிப்பு : மகாபரத சூடாமணியில் இச்செய்யுளின் கடைசி அடி, 'மெதுவுறுங் கட்டிலுக்கும் விசுபல கைக்கு மாமே' என்று காண்கிறது.

(२२) खट्वाहस्तः

चतुरे चतुरं न्यस्य तर्जन्यङ्गुष्ठमोक्षतः ।
खट्वाहस्तो भवेदेषः

विनियोगः

खट्वाशिचिकयोः स्मृतः ॥



(23) பேருண்டம்
(பேருண்டப்பறவை)

கபித்தக்கை இரண்டு கையும் கணுக்கையைக் குறுக்கே நீட்டி
உவப்புடன் பிடித்தி டப்பே ருண்டமாம்; வினியோ கங்கேள்;
புவிக்குள்பே ருண்டத் திற்கே புகன்றனர் பரதத் தோர்கள்;
செவிக்கி னிதாம்சொல் லாய்! சிவன் அயன்,மால் கைசொல் வாரே.
(104)

இலக்: *கபித்தக் கைகள் இரண்டினைக் கணுக்கைகளின் குறுக்கே வைத்தல்.*

விநியோ: *பேருண்டம்.*

*(இனிச் சிவன், அயன், மால் முதலினோர்க்குக் கைகள் சொல்வார்.)*

(२३) भेरुण्डहस्तः

मणिबन्धे कपित्थाभ्यां भेरुण्डकर इष्यते ।

विनियोगः

भेरुण्डे पक्षिदम्पत्योर्भेरुण्डो युज्यते करः ॥

இரட்டைக் கைகளின் அபிநயம் முற்றும்

---

## 6. தேவர்கள்

### (1) பிரமதேவர் (2) ஈசுவரர்

வலக்கைஅம் சாசியம், மற்ற வாமத்தில் சதுர அத்தம்
நலத்துட னேபி டித்தால் நான்முகன் ஆகும் என்ப;
வலக்கையில் திரிப தாகம், மறுகையின் மிருக சீருஷம்
இலக்கண மாய்ப்பி டித்தால் ஈசனுர் தமக்கா மென்னே. (105)

(1) பிரமன்

இலக் : *வலக்கை அம்சாசியம் ; இடக்கை சதுரம்.*

(2) ஈசன்

இலக் : *வலக்கை திரிபதாகம் ; இடக்கை மிருகசிரிடம்.*

## ६. देवहस्ताः

अथात्र ब्रह्मरुद्रादिदेवताभिनयक्रमात् ।
मूर्तिभेदेन ये हस्तास्तेषां लक्षणमुच्यते ॥

(१) ब्रह्महस्तः

ब्रह्मणश्चतुरो वामे हंसास्यो दक्षिणे करः ।

(२) ईश्वरहस्तः

शम्भोर्वामे मृगशीर्षस्त्रिपताकस्तु दक्षिणे ॥

### (3) திருமால் (4) சரசுவதி (5) பார்வதி

இருகையும் திரிப தாகம் இணக்கினல் திருமா லுக்காம் ;
வரும்வலக் கரத்தில் சூசி, வாமத்தில் கபித்தஞ் சேர்த்தால்
சரசுவதிக் காகும் ; அர்த்த சந்திரத் திடக்கை கீழாய்ப்
பரிவலக் கைமேற் காட்டப் பார்வதிக் காகும் என்ப. (106)

(3) திருமால்

**இலக் :** *இரு கைகளிலும் திரிபதாகம் பிடித்தல்.*

(4) சரசுவதி

**இலக் :** *வலக்கையில் சூசி ; இடக்கையிற் கபித்தம் (இரண்டையும் தோள்களுக் கருகில் பிடிக்க).*

(5) பார்வதி

**இலக் :** *அர்த்தசந்திர இடக்கை கீழாகவும், அர்த்தசந்திரன் பிடித்த வலக்கை மேலாகவும் காட்டல். (இவை அபய வரத அஸ்தங்களாக அமைய வேண்டும்).*

(३) विष्णुहस्तः

हस्ताभ्यां त्रिपताकस्तु विष्णुहस्तः सकीर्तिताः ।

(४) सरस्वतीहस्तः

सूचीकृते दक्षिणे च वामे चांससमकृतौ ॥
कपित्थकेऽपि भारत्याः करः स्यादिति सम्मतः ।

(५) पार्वतीहस्तः

ऊर्ध्वाधः प्रसृतावर्धचन्द्राख्यौ वामदक्षिणौ ॥
अभयो वरदश्चैव पार्वत्याः कर ईरितः ।

(6) மலர்மகள் (*இலக்குமி*) (7) கணபதி

கருதி,இ ரண்டு கையுங் கழுத்துக்கு நேர தாக
வரு,கபித் தம்பி டித்தால் மலர்மக ளுக்கே யாகும் ;
இருகையுங் கபித்த மாக இணங்க முன்பாற்பி டித்தால்
அருள்தருங் கணப திக்கே ஆகுமென் றுரைசெய் தாரே. (107)

(6) இலக்குமி

**இலக் :** *இரண்டு கைகளையும் கபித்தங்கள் ஆக்கி, கழுத்துக்கு நேராகத் (தோள்களில்) பிடித்தல்.*

(7) கணபதி

இலக்: *இரண்டு கைகளையும் கபித்தங்களாக்கி முன்னே பிடித்தல்.*

குறிப்பு: *'துடைகளிற் பிடித்தல்' என்று வடமொழிச் சுலோகம் கூறும்.*

(६) लक्ष्मीहस्तः

अंसोपकण्ठे हस्ताभ्यां कपित्थस्तु श्रियः करः ॥

(७) विनायकहस्तः

उरोगताभ्यां हस्ताभ्यां कपित्थो विघ्नराट् करः ।

(8) முருகன் (9) மதன் (*மன்மதன்*)

வலக்கையில் சிகரம்,மற்ற வாமத்தில் திரிசூ லந்தான்
நிலைத்திரு கையும் மேலாய் நீட்டின் முருக னுகும்;
கலக்கமில் வலக்கை தன்னில் கடகாமு கம்,வா மத்தில்
நலம்தொடு சிகரக் கையை நாட்டினல் மதனுக் காமே. (108)

(8) முருகன்

இலக்: *வலக்கையிற் சிகரமும், இடக்கையில் திரிசூலமும் பிடித்து, இரண்டு கைகளையும் மேலாக நீட்டல்.*

(9) மன்மதன்

இலக்: *வலக்கையிற் கடகாமுகமும், இடக்கையில் சிகரமும் காட்டல்.*

(८) षण्मुखहस्तः

वामे करे त्रिशूलश्च शिखरो दक्षिणे करे ॥
ऊर्ध्वं गते षण्मुखस्य हस्तः स्यादिति कीर्तितः ।

(९) मन्मथहस्तः

वामे करे तु शिखरो दक्षिणे कटकामुखः ॥
मन्मथस्य करः प्रोक्तो नाट्यशास्त्रार्थकोविदैः ।

### (10) வாசவன் (*இந்திரன்*) (11) அக்கினிதேவன்

**திரிபதா கம்மி ரண்டும் சேரவே சுவத்தி கம்போல்**
**மருவவே மேலாய் நீட்ட வாசவ னுக்கே யாகும்;**
**திரிபதா கம்வ லக்கை திகழ்இடக் கைகாங் கூலம்**
**அருமையாய்ப் பிடித்துக் காட்டல் அக்கினி தேவ னுமே.** (109)

#### (10) இந்திரன்

**இலக்:** *இரு கைகளிலும் திரிபதாகங்களைச் சுவஸ்திகம் போல் அமைத்து மேலே நீட்டல்.*

#### (11) அக்கினிதேவன்

**இலக்:** *வலக்கையில் திரிபதாகமும், இடக்கையில் காங் கூலமும் பிடித்தல்.*

#### (१०) इन्द्रहस्तः

त्रिपताकः स्वस्तिकश्च शक्रहस्तः प्रकीर्तितः ॥

#### (११) अग्निहस्तः

त्रिपताको दक्षिणे तु वामे काङ्गुलहस्तकः ।
अग्निहस्तः स विज्ञेयो नाट्यशास्त्रविशारदैः ॥

### (12) தருமதேவன் (13) வாயு

**வாமத்திற் பாசம் வைத்து வலக்கையிற் சூசி வைத்தால்**
**ஆமது தரும ராச னுக்கு,அர்த் தபதா கத்தை**
**வாமத்தி லேபி டித்து வலக்கைய ராளஞ் சேர்த்தால்**
**மாமுக்கிய மாய்வி ளங்கு வாயுதே வர்க்கே யாமே.** (110)

#### (12) தருமதேவன்

**இலக்:** *இடக்கையில் பாசமும், வலக்கையில் சூசியும் பிடித்தல்.*

#### (13) வாயு

**இலக்:** *இடக்கையில் அர்த்தபதாகமும், வலக்கையில் அராளமும் சேர்த்தல்.*

(१२) यमहस्तः

वामे पाशं दक्षिणे तु सूची यमकरः स्मृतः ।

(१३) वायुहस्तः

अराले दक्षिणे हस्ते वामे चार्धपताकिका ॥

धृता चेद्वायुदेवस्य कर इत्यभिधीयते ।

(14) நிதிபதி (குபேரன்)

**இச்சிடத்தி டக்கை பத்ம மெழில் கதை வலக்கை தன்னில்**
**நிச்சித்துத் தோள்நேர் காட்டில் நிதிபதிக் காகு மென்பர் ;**

குபேரன்

**இலக்:** *இடக்கையில் பத்மம் (தாமரை), வலக்கையில் கதை (ஓர் ஆயுதம்) நிச்சயித்துக் காட்டல்.*

(१४) कुबेरहस्तः

वामे पद्मं दक्षिणे तु तदा यक्षपतेः करः ॥

**குறிப்பு:** *இவ்வரிசையில்* **நிருதிக்கும் ஈசானனுக்கும்** *கை கூறப்பெற வில்லை ; வடமொழிச் சுலோகத்தில், நிருதிக்கு இரு கைகளிலும் முறையே கட்வா, சகடம் முத்திரைகளாகக் கூறப்படுகின்றன. மகாபரத சூடா மணியிலும், 'நேமமாம் கட்டுவக்கை நிகழ்த்திய சகடக்கையும், தாமெனு நிருதிக்கென்றே சாற்றினர் நூல்வல்லோரே' என்று நிருதிக்குக் கைகள் கூறப்பெற்றுள்ளன. அதேநூல், ஈசானனுக்கு 'நச்சுண்ட சிவன்கையாகு நவிலுமீ சானியற்கு' என்னும்.*

## 7. தசாவதாரங்கள்

### (1) மச்சாவதாரம்

**மச்சக்கை யைப்பி டித்தால் மச்சாவ தாரத் துக்கும்**
**மச்சக்கு லங்க ளுக்கு மாமென்று உரைசெய் தாரே.** (111)

(1) மச்சம்

**இலக்:** *மச்சக்கை பிடித்தல் (இருகைகளிலும் மச்சம் பிடித்து, தோள்களுக்கு நேரே வைத்தல்).*

**விநியோ:** *மச்சாவதாரம் ; மீன் குலங்கள்.*

## दशावतारहस्ताः

### (१) मत्स्यावतारहस्तः

मत्स्यहस्तं दर्शयित्वा ततः स्कन्धसमौ करौ ।
धृतौ मत्स्यावतारस्य हस्त इत्यभिधीयते ॥

### (2) கூர்மாவதாரம் (3) வராகாவதாரம்

கூர்மாத் தமிடம் கழுத்தின் நேராகக் குலவியே பிடித்தால்
கூர்மா வதாரத் துக்கே குறி;வரா கக்கை தன்னைச்
சீர்மருங் குக்கு நேராய்ச் செப்ப மாகப் பிடித்தால்
பேர்மலி யும்வ ராகப் பெருமா ளுக்குத் தானே. (112)

(2) கூர்மம் – ஆமை

இலக் : *கூர்மக் கைகளை இடக்கழுத்தின் நேராகப் பிடித்தல்.*

குறிப்பு : *'கூர்மக்கை இடக்கை நேராய்ப் பிடித்தல்' என்று மகாபரத சூடாமணியும், 'கூர்மக் கைகளைத் தோள்களின் நேராகப் பிடித்தல்' என்று வடமொழிச் சுலோகம் கூறும்.*

(3) வராகம் – பன்றி

இலக் : *வராகக்கைகளை இடுப்புக்கு நேராகப் பிடித்தல்.*

குறிப்பு : *வராகக்கைகளை இடுப்பளவில் பக்கங்களிற் பிடித்தல் என்று வடமொழிச் சுலோகம் கூறும்.*

### (२) कूर्मावतारहस्तः

कूर्महस्तं दर्शयित्वा ततः स्कन्धसमौ करौ ।
धृतौ कूर्मावतारस्य हस्त इत्यभिधीयते ॥

### (३) वराहावतारहस्तः

दर्शयित्वा वराहं तु कटिपार्श्वसमौ करौ ।
धृतावादिवराहस्य देवस्य कर इष्यते ॥

### (4) நரசிங்காவதாரம் (5) வாமனாவதாரம்

வருசிங்க முகமி டக்கை வலக்கையில் திரிப தாகம்
தெரியவே பிடித்தால் நார சிங்காவ தாரத் திற்கும்,
ஒருமுட்டி வலக்கை மேற்பால், ஒருமுட்டி இடக்கை கீழ்ப்பால்,
வருவித்துப் பிடித்தால் தூய வாமன மூர்த்திக்கும் ஆமே. (113)

#### (4) நரசிங்கம்

இலக்: *இடக்கையில் சிம்மமுகத்தையும் வலக்கையில் திரிபதாகத்தையும் பிடித்தல்.*

#### (5) வாமனம்

இலக்: *வலக்கை முஷ்டியை மேல்நோக்கியும், இடக்கை முஷ்டியைக் கீழ்நோக்கியும் வைத்துப் பிடித்தல்.*

#### (४) नृसिंहावतारहस्तः

वामे सिंहमुखं धृत्वा दक्षिणे त्रिपताकिका ।
नरसिंहावतारस्य हस्त इत्युच्यते बुधैः ॥

#### (५) वामनावतारहस्तः

ऊर्ध्वाधोधृतमुष्टिभ्यां सव्यान्याभ्यां यदि स्थितः ।
स वामनावतारस्य हस्त इत्यभिधीयते ॥

### (6) பரசுராமாவதாரம் (7) இராமாவதாரம்

வலக்கைஅர்த் தபதா கந்தான் மருங்கினில் இடைக்கை சேர்த்தே
இலக்கிய மாய்ப்பி டித்தால் பரசு ராமர்க் காகும்;
வலக்கையிற் கபித்தம் சேர்த்து, வாமத்தின் சிகரம் சேர்த்து
நலத்துட னேபி டித்தால் இராமாவ தார மாமே. (114)

(பி-ம்.) 3. *வாமத்தின் முட்டி.*

#### (6) பரசுராமன்

இலக்: *வலக்கையில் அர்த்தபதாகம் பிடித்து, இடக்கையை இடுப்பில் வைத்தல்.*

### (7) இராமன்

**இலக் :** *வலக்கையில் கபித்தமும் இடக்கையில் முஷ்டியும் பிடித்தல்.*

### (६) परशुरामावतारहस्तः

वामं कटितटेऽन्यस्य दक्षिणेऽर्धपताकिका ।
धृता परशुरामस्य हस्त इत्यभिधीयते ॥

### (७) रामचन्द्रावतारहस्तः

कपित्थो दक्षिणे हस्ते वामे तु शिखरः करः ।
ऊर्ध्वं धृतो रामचन्द्रहस्त इत्युच्यते बुधैः ॥

### (8) பலராமாவதாரம் (9) கிருஷ்ணாவதாரம்

**வலக்கையிற் பதாகஞ் சேர்த்து, வாமத்தில் முட்டி சேர்த்தால்**
**பலராமர்க் காம்;வ லப்பால் பண்பான கழுத்து நேராய்**
**இலகிய மிருக சீர்டத் திடக்கனிட் டிகையில் மிக்க**
**வலதங்குட் டத்தைச் சேர்த்தால் மால்கிட்டின மூர்த்திக் காமே.**

### (8) பலராமன்

**இலக் :** *வலக்கையில் பதாகமும், இடக்கையில் முஷ்டியும் சேர்த்தல்.*

### (9) கிருஷ்ணன்

**இலக் :** *இடக்கையில் மிருகசீரிடம் பிடித்து, அதன் சுண்டு விரலில் வலக்கையின் கட்டைவிரலைச் சேர்த்தல்.*

குறிப்பு: *இவ்வாறே மகாபரத சூடாமணியும் கூறும். ஆனால், வடமொழிச் சுலோகம் இரண்டு மிருகசீரிடக்கைகளை எதிரெதிராக முகத்தின் நேரே பிடித்தல் என்று கூறும்.*

### (८) बलरामावतारहस्तः

पताको दक्षिणे हस्ते मुष्टिर्वामकरे तथा ।
बलरामावतारस्य हस्त इत्युच्यते बुधैः ॥

(९) कृष्णावतारहस्तः

मृगशीर्षे तु हस्ताभ्यामन्योन्याभिमुखे कृते ।
आस्योपकण्ठे कृष्णस्य हस्त इत्युच्यते बुधैः ॥

### (10) கல்கி அவதாரம்

வலத்தில்ப தாகங் காட்டி மறுகைசிங் கமுகங் காட்டில்
நிலைத்தகல் கியாவ தாரம் நெடுமாலுக் குமாகு மென்ப ;
இலக்குடன் முகத்தின் நேராய் இருகையுஞ் சகடங் காட்டில்
வலுப்பெறு ராட்ச தர்க்கே வழுத்தினர் பரதத் தோரே (116)

### (10) கல்கி

**இலக்:** *வலக்கையில் பதாகமும், இடக்கையில் சிங்கமுகமும் காட்டல்.*

குறிப்பு: *கல்கிக்கு வலக்கை பதாகமும், இடக்கை திரிபதாகமும் என்று வடமொழிச் சுலோகம் கூறும். மகாபரத சூடாமணி, பௌத்தருக்கும் சமணருக்கும் வலக்கையில் கீழ் நோக்கிய முஷ்டியும் இடக்கையில் மயூரமும், என்று கூறும். வடமொழி நூல் புத்தருக்கும் சமணருக்கும் கைகள் கூறவில்லை ; இங்கும் கூறப்படாமை காண்க.*

*இப்பாடலின் இறுதி அடியில், இராக்கதர்க்கு, 'முகத்தின் நேரே இரு கைகளிலும் சகடம் காட்டல்' என்று கூறப்பட்டிருக்கிறது.*

(१०) कल्क्यवतारहस्तः

पताको दक्षिणे वामे त्रिपताकः करो धृतः ।
कल्क्याख्यावतारस्य हस्त इत्यभिधीयते ॥

தசாவதாரங்கள் முற்றும்

---

## 8. நான்கு சாதிகள்

### (1) பூசுரர்

இருகையுஞ் சிகரங் கூட்டி, இடக்கைமார்பு நேரே நீட்டி
ஒருவலக் கைபூ ணூல்போ லுரத்திலே குறுக்கே காட்டி
வருமிடத் தாளைத் தொட்டு வலதுபா லிடைமட் டுக்கும்
பொருத்தியே பிடித்தால் மிக்க பூசுரர் தமக்கே யாமே. (117)

**இலக் :** *இரு கைகளிலும் சிகரம் பிடித்து, இடக்கையை மார்பின் நேரே நீட்டி, வலக்கையைப் பூணூல் தரிப்பதுபோல் மார்பின் குறுக்கே காட்டி, (இடக்காலைத் தொட்டு வல இடுப்பு மட்டும் பொருந்தும் படியாய்க்) காட்டல்.*

குறிப்பு: செய்யுளிலுள்ள பின் இரண்டடிகளின் விளக்கம் வடமொழிச் சுலோகத்தில் இல்லை.

### (१) ब्राह्मणहस्तः

करभ्यां शिखरं धृत्वा यज्ञसूत्रस्य सूचने ॥
दक्षिणेन कृते तिर्यग् ब्राह्मणानां करः स्मृतः ।

### (2) க்ஷத்திரியர் (3) வைசியர்

சிகரத்தை இடக்கை சேர்த்துச் செறிபதா கம்வ லத்தில்
தகைமையாய்க் குறுக்கே காட்டில் சத்திரி யருக்கே யாகும்;
மகிழ்கட காமு கக்கை வலக்கையில் சேர்த்து,அம் சாசியம்
திகழ்இடம் சேர்த்தால் வைசியச் செட்டியர்க் காகுந் தானே.
(118)

### (2) க்ஷத்திரியர்

**இலக் :** *இடக்கையில் சிகரத்தைச் சேர்த்து, வலக்கையில் பதாகத்தைக் குறுக்கே காட்டல்.*

குறிப்பு: இடக்கையில் சிகரத்தைக் குறுக்காகப் பிடித்து, வலக்கையில் பதாகம் கொள்வது என்று வடமொழி நூல் கூறும்.

### (3) வைசியர்

**இலக் :** *வலக்கையில் கடகாமுகமும் இடக்கையில் அம்சாசியமும் பிடித்தல்.*

(२) क्षत्रियहस्तः

वामेन शिखरं तिर्यग् धृत्वान्येन पताकिका ।
धृता यदि क्षत्रियाणां हस्त इत्यभिधीयते ॥

(३) वैश्यहस्तः

करो वामे तु हंसास्यो दक्षिणे कटकामुखः ।
वैश्यहस्तोऽयमाख्यातो मुनिभिर्भरतादिभिः ॥

(4) வேளாளர் (5) பதினெண் சாதிகள்

வாமத்தில் சிகரஞ் சேர்த்து வலக்கையில் சூசி சேர்த்தால்
பூமிக்குள் சூத்தி ரர்க்காம்; புகழ்பதி னெண்சா திக்கும்
காமித்துஅந் தந்தச் சாதி கலந்தி டுதலைக் காட்டி
நேமித்தார் சாதி பேதம் நீடுல கறியத் தானே. (119)

(4) வேளாளர்

இலக்: *இடக்கையில் சிகரமும், வலக்கையில் சூசியும் சேர்த்தல்.*

குறிப்பு: *வலக்கையில் மிருகசிருடம் பிடிப்பது என்பது வடமொழிச் சுலோகம்.*

(5) பதினெண் சாதியார்

*இவ்வாறே பதினெண் சாதிகளுக்கும் அந்த அந்தச் சாதி கலந்திடுதலைக் காட்டல் என்று நியமித்தனர்.*

(४, ५) शूद्रहस्तः

वामे तु शिखरं धृत्वा दक्षिणे मृगशीर्षकः ॥
शूद्रहस्तः स विज्ञेयो मुनिभिर्भरतादिभिः ।
यदष्टादशजातीनां कर्म तेन कराः स्मृताः ॥
तत्तद्देशजानामपि एवमूह्यं बुधोत्तमैः ।

சாதிபேதம் முற்றும்

---

## 9. பாந்தவ்யக் கைகள் (உறவினர்)

### (1) தம்பதிகள்

வாமத்தில் சிகரஞ் சேர்த்தால் வருபுரு டர்க்கே யாகும்;
மாமிரு கசிரந் தன்னை வலக்கைசேர்க் கப்பெண் ணுக்காம்;
வாமத்தில் சிகரமந்த வலக்கையில் மிருக சீர்டம்
பூமலி குழலீர் சேர்த்தால், புருஷன்பெண் டாட்டிக் காமே.
(120)

(1) புருடன்

இலக்: *இடக்கையில் சிகரம் பிடித்தல்.*

(2) மனைவி

இலக்: *வலக்கையில் மிருகசீரிடம் பிடித்தல்.*

(3) இருவரும்

இலக்: *இடக்கையில் சிகரமும் வலக்கையில் மிருகசீரிடமும் பிடித்தல்.*

(१) दम्पतिहस्त:

वामे तु शिखरं धृत्वा दक्षिणे मृगशीर्षकः ॥
धृतः स्त्रीपुंसयोर्हस्तः ख्यातो भरतकोविदैः ।

### (2) மகளும் தாயும்

வாமமாங் கைவா மப்பால் வருமர்த்த சந்திரஞ் சேர்த்துத்
தாமமார் வலக்கை தன்னில் சந்தம்சம் பிடித்த லோடே
ஆமென வயிற்றில் சுற்றி அதன்பின்னே வாமக் கையில்
மாமிரு கசிரம் சேர்த்தால் மகளுக்கும் தாய்க்கு மாமே. (121)

இலக்: *இடக்கையில் இடப்பக்கமாக அர்த்த சந்திரனையும், வலக்கையில் சந்தம்சமும் பிடித்து, வயிற்றில் சுற்றிப் பிறகு இடக்கையில் மிருகசீரிடம் பிடித்தல் மகளுக்கும் தாய்க்குமாம்.*

குறிப்பு: *வடமொழியில் மாத்ரு ஹஸ்தம் என்று இலக்கணங்கூறி, தாய்க்கும் மகளுக்கும் இது விநியோகிக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது. அச்சுலோகத்தில், 'பிறகு மிருகசீரிடம் பிடித்தால்' என்பது இல்லை.*

(२) मातृहस्तः

वामेहस्तेऽर्धचन्द्रश्च सन्दंशो दक्षिणे करे ॥

आवर्तीयत्वा जठरे वामहस्तं ततः परम् ।

स्त्रियाः करो धृतो मातृहस्त इत्युच्यते बुधैः ॥

विनियोगः

जनन्यां च कुमार्यां च मातृहस्तो नियुज्यते ।

(3) தந்தை (4) மாப்பிள்ளை

இயம்பிய தாயத் தத்தில் இடக்கையில் சிகரஞ் சேர்த்தால்
சயந்தரு தகப்ப ஞர்க்கும் தன்மாப் பிள்ளைக்கு மாகும்;
நயந்தரு பரத சாத்திர நன்னூலோர் யாவர் நெஞ்சும்
மயங்கிடா வண்ணஞ் சேர்ந்த மாமியார் கைசொல் வாரே.
(122)

தந்தை; மாப்பிள்ளை

இலக்: *முன் சொல்லப்பெற்ற தாய்க்கரத்தில் இடக்கையில் சிகரம் சேர்த்தல். இருவருக்கும் ஆகும்.*

குறிப்பு: *வடமொழிச் சுலோகத்தில் தாய்க்கரத்தில் வலக்கையில் சிகரம் பிடித்தால் தந்தைக்கும், அந்தக் கையே மருமகனுக்கும் ஆகும் என்று கூறப்படுகிறது.*

(३, ४) पितृहस्तः

एतस्मिन् मातृहस्ते तु शिखरे दक्षिणेन तु ॥

धृते सति पितुर्हस्त इत्याख्यातो मनीषिभिः ।

विनियोगः

अयं हस्तस्तु जनके जामातरि च युज्यते ॥

(5) மாமியார்

இலகுஅம் சாசிய அத்தம் இடக்கையால் கழுத்தில் சேர்த்து
வலதுசந் தம்சம் தன்னை வயிற்றினில் அழுத்தி யேபின்
நலமிகும் இடக்கை தன்னில், நன்மிருக சீர்டஞ் சேர்த்தால்
மலர்மலி குழலீர் சொந்த மாமியா ருக்கே யாமே. (123)

**இலக்:** *இடக்கையில் அம்சாசியம் பிடித்துக் கழுத்தில் சேர்த்து, வலக்கையில் சந்தம்சத்தைப் பிடித்து, வயிற்றினில் அழுத்தி, பிறகு இடக்கையில் மிருகசீரிடத்தைப் பிடித்தல்.*

குறிப்பு: *மகாபரத சூடாமணியில் 'வலதுசந் தம்சந் தன்னை வயிற்றினிற் சுழற்றி' என்று கூறப்படுகிறது.*

(५) श्वश्रूहस्तः

विन्यस्य कण्ठे हंसास्यं सदंशं दक्षिणे करे ।
उदरे च परामृश्य वामहस्तं ततः परम् ॥
स्त्रियाः करो धृतः श्वश्रूहस्तस्तस्यां नियुज्यते ।

**(6) மாமனார் (7) அண்ணன், தம்பி**

**மாமிதன் கையில் தானே வலக்கையில் சிகரஞ் சேர்த்தால்**
**மாமனு ருக்கா மென்று வழுத்தினர் பரதத் தோரே;**
**மாமயூ ரக்கை தன்னால், வருமுன்னும் பின்னுங் காட்டில்**
**தாமஞ் சேர்குழலீர்! அண்ணன் தம்பிக்கு மாகும் தானே.**
(124)

(6) மாமனார்

**இலக்:** *மாமியார்க்குரிய கையில், வலக்கையைச் சிகரக் கையாக அமைப்பது.*

**(7) அண்ணன், தம்பி**

**இலக்:** *மயூரக்கையை முன்னும் பின்னுமாகக் காட்டல்.*

*தாமம் – மாலை. குழலீர்; விளி.*

குறிப்பு: *மயூரஹஸ்தத்தை முன்னும், பக்கங்களிலும் காட்டல் என்று வடமொழிச் சுலோகம் கூறும்.*

(६) श्वशुरहस्तः

एतस्यान्ते तु हस्तस्य शिखरो दक्षिणे यदि ॥
धृतश्च श्वशुरस्यायं हस्त इत्युच्यते बुधैः ।

(७) ज्येष्ठकनिष्ठभ्रातृहस्तः

मयूरहस्तः पुरतः पार्श्वभागे च दर्शितः ॥
ज्येष्ठभ्रातः कनिष्ठस्याप्ययं हस्त इति स्मृतः ।

### (8) மைத்துனன் (9) நாத்தி

**வாமக்கைச் சிகரம் பக்கம் வலக்கைகர்த் தரிமு கஞ்சேர்**
**மாமைத்து னனுக்கே யாகும்; அதன்வலக் கையின் மீதே**
**நீமிருக சிகரஞ் சேர்த்தால் நிகழ்த்தலாம் நாத்த னூர்க்கே**
**பூமியில்; அப்பால், பெற்ற புத்திரன் கைசொல் வாரே.** (125)

**மைத்துனன்**

**இலக்:** *இடக்கை சிகரமும், அதன் பக்கத்தில் வலக்கை கர்த்தரி முகமும் சேர்த்து வைத்தல்.*

**நாத்தி**

**இலக்:** *மைத்துனர்க்குரிய கையில் வலக்கை மிருகசிரிடமாகக் கொள்ளல்.*

குறிப்பு: *மைத்துனனுக்குரிய கையை* **முதலில் பிடித்து,** *பின் வலக் கையை மிருகசிரிடமாக மாற்றுதல் ஆம்.*

(८) भर्तृभ्रातृहस्तः

वामे तु शिखरं धृत्वा पार्श्वयोः कर्तरीमुखः ॥
धृतो दक्षिणहस्तेन भर्तृभ्रातृकरः स्मृतः ।

(९) ननान्दृहस्तः

अन्ते त्वेतस्य हस्तस्य स्त्रीहस्तो दक्षिणे करे ॥
धृतो ननान्दृहस्तः स्यादिति नाट्यविदांमतम् ।

### (10) புத்திரன் (11) மருமகள்

**வலக்கைசந் தஞ்சஞ் சேர்த்து வயிற்றி னிலேய முத்தி**
**இலக்கிய இடக்கை தன்னில் எழிற்சிக ரம்பி டித்தால்**
**பலத்தபுத் திரனுக் காகும்; பிறகதில் மிருக சீர்சம்**
**வலக்கையிற் பிடித்தால், சொந்த நாட்டுப் பெண்ணுக்கு மாமே.** (126)

**(10) மகன்**

**இலக்:** *வலக்கையில் சந்தம்சம் அமைத்து, அதனை வயிற்றினிலே அழுத்தி, இடக்கையில் சிகரம் பிடித்தல்.*

### (11) மருமகள்

**இலக் :** *மகனுக்குரிய கையைப் பிடித்துப் பிறகு அதனில் வலக்கையில் மிருகசிரிடக்கை கொள்வது.*

### (१०) पुत्रहस्तः

सन्दंशमुदरे न्यस्य भ्रामयित्वा ततः परम् ॥
धृते वामेन शिखरे पुत्रहस्तः प्रकीर्तितः ।

### (११) स्नुषाहस्तः

एतदन्ते दक्षिणेन स्त्रीहस्तश्च धृतो यदि ॥
स्नुषाहस्त इति ख्यातो भरतागमकोविदैः ।

### (12) சக்களத்தி

பாசக்கை பிடித்தி ரண்டு பக்கமு மிருகை யாலே
நேசித்து மிருக சீர்சம் நீபிடித் திட்ட போதே
காசினி தன்னில் வாழும் சக்களத்திக் காமென் றெடுத்துப்
பேசினர் பரதந் தன்னில் பிரபலமா கியநல் லோரே. (127)

### (12) சக்களத்தி

(*சக களத்திரம் என்பது திரிந்து சக்களத்தி என்றாயிற்று*).

**இலக் :** *பாசக்கையைப் பிடித்துக் காட்டிப் பிறகு இரண்டு பக்கங்களிலும் இரு கைகளினாலும் மிருகசீர்ஷக் கையைக் காட்டல்.*

### (१२) सपत्नीहस्तः

दर्शयित्वा पाशहस्तं कराभ्यां स्त्रीकरावुभौ ॥
धृतौ सपत्नीहस्तः स्यादिति भावविदोविदुः ।

பாந்தவ்யங்களின் அபிநயம் முற்றும்

## 10. பொது

எவ்விடந் தன்னிற் கைக ளசையும் அவ்விடத்தே கண்சேர
எவ்விடம் தன்னிற் கண்க ளிருக்கும் அவ்விடம் மனஞ்சேர
எவ்விடம் மதிபோ மந்த விடத்திலே பாவஞ் சேரும்
எவ்விடம் பாவமோ அவ்விடத்திலே ரஸமுண் டாமே. (128)

*கைகள் அசையும் இடத்தில் கண்கள் சேரவும், கண்க ளிருக்கும் இடத்தில் மனம் சேரவும், மனமுள்ள இடத்தில் பாவம் சேரவும், பாவம் உள்ள இடத்தில் ரஸம் உண்டாத லும் ஆம்.*

## 11. சுவைகள்

சிங்காரம் வீர மென்றும், சிறக்குநீள் கருணை யென்றும்
அங்குயர் அற்பு தம்தான் ஆசியம் பயம்தா னென்றும்
புங்கவா பீபச்சம் பொருந்திய ரௌத்ர மென்றும்
இங்கித நவர சங்கள் இயம்பினர் பரதத் தோரே. (129)

பொருள்: *சிங்காரம், வீரம், கருணை, அற்புதம், ஹாஸ்யம், பயம், சாந்தம், பீபத்ஸம், ரௌத்ரம்.*

*புங்கவர்–மேலோர்; புங்கவர் அகம்–சாந்தநிலை.*

குறிப்பு: *இதனுடன் தமிழ்ச் சுவடி முடிந்து விடுகிறது. எனினும் மாணவர்களுக்கு இன்றியமையாத சில குறிப்புக்களைத் தக்க தலைப்புக் களுடன் மகாபரத சூடாமணி என்ற நூலிலிருந்து தொகுத்துப் பிற்சேர் பாக அமைத்துள்ளோம்.*

அபிநயதர்ப்பணம் முற்றும்

*திருச்சிற்றம்பலம்*

---

# பிற்சேர்பு

**அபிநயதர்ப்பணத் தமிழ்ச் சுவடியில்** *காணுதனவும், மாண வர்க்கு இன்றியமையாதனவுமான சில செய்திகள் மகாபரத சூடாமணி என்னும் நூலினின்று திரட்டிப் பிற்சேர்பாக இங் குக் கொடுக்கப்பெற்றுள்ளன.*

## 1. காலங்களின் அபிநயம்

### (1) அயனங்கள்

**அயனத்தின் அபிந யந்தான்அ ருளுத்த ராய னத்திற்(கு)**
**இயம்புதக்ஷி ணக்கை சூசி ஏகும்உத் வேஷ்டி தத்தால்**
**நயம்பெறச் சுற்றி வாமக் கைப்புற நாடி நிற்கில் ;**
**சயம்பெறு பரத நூலிற் சாற்றினர் திசையு ளோர்க்கே.** (1)

**தெக்கணு யனத்தின் பாவம் திசைகொளும் வாமக் கையை**
**நிற்கவே சூசி யாக்கி நிலைசுற் றித்தக்ஷி ணத்தின்**
**பக்கமே சாயச் செய்தல் ; பகரும்அவ் வயனத் தின்கை**
**மிக்கஅத் திரிம தத்தில் விளம்பினர் பரத நூலில்.** (2)

#### அயனங்களுக்குக் கைகள்

**உத்தராயனம் :** *வலக்கையைச் சூசிக்கையாக்கி உத்வேஷ்டி தமாகச் சுற்றி, இடக்கைப்புறத்தை நாடி நிற்கச் செய்தல்.*

**தக்ஷிணுயனம் :** *இடக்கையைச் சூசியாக்கிச் சுற்றி வலக் கையின் பக்கத்தில் சாயச் செய்தல்.*

*இஃது, அத்திரி கூறியது.*

### (2) ருதுவின் அபிநயம்

வசந்தமாம் அராளக் கையை வாமபா கத்தி லாட்டி
நிசந்தரு பதாகங் கூட்ட நிகழ்வசந் தவிருது வாகும்;
பசையிரு பதாகக் கையை மேல்கீழாய்ப் பகுந்து நீட்டில்
அசைவிலா விருது கீஷ்ம மாகுமென் றறிந்து கொள்ளே. (3)

இருகரஅம் சாசி யத்தை ஏற்றிமேற் சலன மாக்கி
வரும்ஒரு பதாகத் தாலே வருஷமாம் ருதுவு மென்பர்;
கரம்இரு பதாகத் தாலே கைகாட்டி யாட்டி நின்றால்
சரற்கால ருதுவா மென்று சாற்றினர் பரத நூலோர். (4)

வாமதக்ஷி ணத்தி னாலே வளர்திரி லிங்கக் கையால்
ஏமந்த ருதுவா மென்பர்; இயல்சிசி ருதுவுக் கேதான்
சேமப்பி ரேரி தச்சூ சிக்கரம் திரிலிங் கம்மாம்
சோமநா தன்ம தத்திற் சொல்லுவ தறிந்து செய்யே. (5)

1. வஸந்தருது *(சித்திரை-வைகாசி)—இளவேனில்—அராளக்கையை இடப்பக்கத்தில் ஆட்டிப் பதாகங் கூட்டல்.*

2. கிரீஷ்மருது *(ஆனி-ஆடி)—முதுவேனில்—இரு பதாகக் கைகளை மேல் கீழாய்ப் பகிர்ந்து நீட்டல்.*

3. வர்ஷருது *(ஆவணி-புரட்டாசி)—கார்—இரண்டு கைகளில் அம்சாசியங்களை ஏற்றிச் சலனமாக்கி, ஒரு பதாகத்தால் நிறுத்துவது.*

4. சரத்ருது *(ஐப்பசி-கார்த்திகை)—கூதிர்—இரு பதாகங்களைக் காட்டி ஆட்டல்.*

5. ஹேமந்தருது *(மார்கழி-தை)—முன்பனி—இரு கைகளைத் திரிலிங்கமாகப் பிடித்தல்.*

6. சிசிரருது *(மாசி-பங்குனி)—பின்பனி—ப்ரேரித சூசிக் கரம், திரிலிங்கம்.*

*இது, சோமநாதன் மதம்.*

### (3) பக்ஷத்தின் அபிநயம்

வாமக்கை பிறைக்கை யாக்கி வானத்தை நோக்கு மற்ற
நேமக்கைச் சந்தம் சம்மாய் நிகழ்சுக்கில பட்ச மென்பர்;
ஆமது பூர்ண நாபக் கரமதி லர்த்த சந்த்ரன்
தாமதை மறைக்கிற் கிருஷ்ண பட்சமாய்ச் சாற்று நூலே. (6)

**சுக்கிலபக்ஷம் :** *இடைக்கையைப் பிறைக்கையாக்கி, வானத்தை நோக்க வைத்து, வலக்கையைச் சந்தம்சமாக நிறுத்தல்.*

**கிருஷ்ணபக்ஷம் :** *பூர்ணநாபக்கையில் அர்த்தசந்திரக்கையை மறைத்தல்.*

### (4) லக்னங்களினபிநயம்

ஆடுகாங் கூலம்; ஏறுக் காகுமே சிகரக் கையாய்;
நீடிய மிதுனத் திற்கு நேர்சூசி; சுகதுண் டக்கை
நாடிய நண்டிற் காகும்; நல்லரி கீழ்நோக் குற்றுத்
தேடிய வரிமு கந்தான்; தெரிவைக்கு மிருகச் சென்னி. (7)

சென்னிநேர் துலைக்குக் கையாஞ் சீர்கலசம்; தேளுக்குப்
பன்னிய நண்டா கும்;சா பத்திற்குச் சதுர மாகும்;
முன்னுமஞ் சலிசு ருவா யுறுகும்பம் பதும கோசம்
மன்னுமீன் றிரிப தாகை வகுத்தனர் பரத நூலோர். (8)

பரதநூல் வியாசர் சொன்ன பன்னிரு ராசி தன்னைத்
திரமதா யூகத் தோடு சிறக்கவே யிருகை யாலே
பெருமையா யபிந யித்துப் பேசுங்கா லன்றோ ரெல்லாம்
அருமைசேர் மகிழ்வினாலே யானந்த மடைவர் பாரே. (9)

### லக்னங்களினபிநயம்

| | லக்கினம் | | கை |
|---|---|---|---|
| 1. | மேஷம் | (ஆடு) | காங்கூலம் |
| 2. | ரிஷபம் | (ஏறு) | சிகரம் |
| 3. | மிதுனம் | (இரட்டை) | சூசி |
| 4. | கடகம் | (நண்டு) | சுகதுண்டம் |
| 5. | சிம்மம் | (அரி) | அதோமுகமான சிம்மமுகம் |
| 6. | கன்னி | (தெரிவை) | மிருகசிரிடம் |

| | | | |
|---|---|---|---|
| 7. | துலாம் | (துலே) | கலசக்கை |
| 8. | விருச்சிகம் | (தேள்) | கர்க்கடகக்கை |
| 9. | தனுசு | (சாபம்) | சதுரக்கை |
| 10. | மகரம் | (சுறு) | அஞ்சலி |
| 11. | கும்பம் | (குடம்) | பத்மகோசம் |
| 12. | மீனம் | (மீன்) | திரிபதாகை |

*இவை ஸ்ரீ வியாசர் கூறியவை.*

### (5) நவக்கோள்களினபிநயம்

ஓமெனும் கழுத்து வாகுக் குகங்கெதிர் கபித்தக் கையும்
ஆமல பதுமக் கையும் அமைப்பது பானு வாகும்;
வாமத்திற் பதுமக் கையாய் வலத்தினிற் பதாகம் வைத்தால்
மாமதிக் காகுமென்று வழுத்தினர் பரத நூலோர். (10)

நூலினில் உரைத்த வாம நோக்குங்கை சூசி யாக்கி
மேல்வல முட்டி யாக்கு வித்தது செவ்வா யாகும்;
கோலமாம் இடது பக்கங் கூட்டிய முட்டிக் கையோ(டு)
ஏலவே வலது கைப்ப தாகமே புதனுக் கென்பாம். (11)

புதனென்ற குருவுக் கேதான் பொருந்திய சிகரம் இரண்டும்
இதமுள வெக்கு சூத்ரம் போலவே இயம்ப லாகும்;
மதிவல மிடமாங் கைக ளானதைக் கீழு மேலும்
மதியுடன் முட்டி யாக்க வாமமாஞ் சுங்க னுக்கே. (12)

வாமத்திற் சிகரம் வைத்து வலக்கைத்தி ரிசூலம் வைத்தால்
நேமமாம் சனியென் றோதி நிகழ்த்திடும்; சர்ப்ப சீர்ஷம்
வாமத்தில் வைத்து சூசி வலக்கையி லேபி டித்தாற்
சேமமி ராகு விற்கே செப்பினர் பரதத் தோரே. (13)

பரதத்தி லாய்ந்து ணர்ந்த பாவக்கை யறிந்து மொண்பான்
கிரகமாங் கேது விற்கே கிளம்பிய வலக்கை தன்னில்
அருத்தப தாகை யாக்கி யதனிட வத்தஞ் சூசி
உரைத்தவா னதிபு னேங்தோன் ஊகம தறிந்து செய்யே. (14)

சூரியன்—*கழுத்துக்கும் புஜத்திற்கும் எதிரே கபித்தக்கை யையும் அலபத்மக்கையையும் நிறுத்துதல்.*

**சந்திரன்**—*இடத்தில் பதுமக்கையும் வலத்திற் பதாகமும் வைத்தல்.*

**செவ்வாய்**—*இடக்கை சூசியாக்கி, மேலே வலக்கை முட்டியாக்கி வைப்பது.*

**புதன்**—*இடக்கை முட்டியும், வலக்கை பதாகமும் ஆகும்.*

**வியாழன்**—*இரண்டு சிகரக்கைகளை யஞ்ஞசூத்திரம்போல் வைப்பது.*

**வெள்ளி**—*வலமிடக்கைகளைக் கீழும் மேலும் முட்டிக்கைகளாக வைத்தல்.*

**சனி**—*இடக்கைச் சிகரமும், வலக்கைத் திரிசூலமும் வைத்தல்.*

**இராகு**—*இடத்தில் சர்ப்ப சிருஷமும், வலத்தில் சூசியும் வைத்தல்.*

**கேது**—*வலக்கை அர்த்த பதாகம், இடக்கை சூசி.*

*இவை, கங்காதரன் கூறியவை.*

## 2. ஸ்தாவராதி அபிநயம்

### (1) குளம், படி, கிணறு

**அளவிலாச் சூசிக் கையை அபவேஷ்டி தமதாய்ச் செய்து**
**சுழலுநாற் கோண மாகச் சுற்றிப்ப தாகந் தன்னைக்**
**குழையவே சலனஞ் செய்தல் குளங்களுக் காகு மென்று**
**மழலைசேர் மொழியி னுளே வகுத்தனர் நூல்வல் லோரே.** (15)

**கேளிரு சதுரக் கையைக் கீழ்மேலாய்த் தாவிக் காட்டல்**
**வாழிய படிக ளுக்கு வகுத்தலாம்; சூசி சுற்றிப்**
**பாழிலாக் கபித்தந் தன்னை அபவேஷ்டி தமதாய்ப் பற்றி**
**நீளவா கருஷ ணித்தல் நிகழ்த்துவாய் கூபத் திற்கே.** (16)

#### குளம், படி, கிணறு இவற்றின் அபிநயம்

**குளம்**—*சூசிக்கையை அபவேஷ்டிதமாய்ச் செய்து, நாற்கோணமாகச் சுற்றி, பதாகத்தைச் சலனமாக்குதல்.*

**படிகள்**—*இரு சதுரக் கைகளைக் கீழ்மேலாய்த் தாவிக் காட்டல்.*

**கிணறு**—*சூசிக்கையைச் சுற்றி, கபித்தக்கையை அபவேஷ்டிதமாய்ப் பற்றி நீள ஆகர்ஷித்தல்.*

(2) பட்டணம், ஊர், கிராமம்

பட்டணம் என்ப தற்குப் பதுமகோ சக்க ரத்துஉத்
வேட்டித மாய்த்தி ருத்தி விசையுறக் காட்ட லாகும்;
நாட்டியே இக்க ரந்தான் நவில்கிராமம் ஊர்க ளுக்கும்
காட்டலா மென்று நூலைக் கற்றவ ருரைசெய் தாரே. (17)

*பட்டணம், ஊர், கிராமம் ஆகியவற்றிற்கு, பதுமகோசக் கையை உத்வேஷ்டிதமாய்த் திருப்பி விசையுறக் காட்டலாகும்.*

## 3. ஜலஜந்துக்கள்

மீன், நண்டு, தவளை, ஆமை, முதலை

மீனுக்கு மச்சக் கையாய் விளம்பினர்; அலவ னுக்குத்
தானிரு கையுங் கற்க டகமதாம்; தவளைக் காகும்
ஊனமில் சக்க ரக்கை; ஆமைக்கு உண்ணு வத்தம்;
மானேநீ முதலைக் குச்சு வத்திகப் பதாகை சொல்லே. (18)

ஜந்துக்கள்

*மீன்–மச்சக்கை; நண்டு–இரண்டு கைகளும் கற்கடகங்கள். தவளை–சக்கரக்கை. ஆமை–உண்ணுவத்தம் (?) (கூர்மக்கை). முதலை – சுவத்திகப் பதாகை.*

## 4. பறவைகள்

அன்னம், கவுதாரி, கிளி, கழுகு, அன்றில்

அன்னத்திற் காகு மஸ்த மம்சாச்யம்; கௌதா ரிக்குச்
சொன்னதோர் பாணக் கையாம்; சுகதுண்டங் கிளிக்கே யாகும்
மன்னிய கழுகு ஞான முத்திரை; அன்றி லுக்கு
அன்னமே கேள், சி லிட்ட வலபத்மக் கைய தாமே. (19)

குயில், ஊர்க்குருவி, செம்போத்து

புகலுவாய் குயில்த னக்குப் புங்கித வராளக் கையாய்ச்
சிகையுமூர்க் குருவி யெல்லாஞ் சிலிட்டமுட் டிக்கை யென்றே
தகுமென்பர்; மொழியா லின்பந் தந்திடுங் கமல மாதே!
மகிசெம்போத் ததோமு கச்சி லிட்டசுக துண்ட மாமே. (20)

**மீன்கொத்தி, வெண்புரு, மாடப்புரு, காட்டுப்புரு**

இயம்புவாய் மீன்கொத் திக்குச் சாளையக் கையே யேற்கும் ;
கயவெண்பு ருக்க போதக் கைகுறுக் காய்ப்பி டித்தல் ;
புயன்மாடப் புருக்க போதக் கையைப்புங் கிதமாய்ச் செய்தல் ;
அயல்காட்டுப் புரு விரண்டு அர்த்தசந் திரனென் றேதே. (21)

**கொக்கு, மின்மினி, வண்டு, காக்கை**

கொக்குச்சி லிட்ட வம்சா சியங்கூறும் ; மின்மி னிக்கு
முக்யமா முகவம் சத்தை முகத்துநேர் பிடித்த லாகும் ;
வக்கிர வண்டிற் குப்பி ரமரக்கை யாம் ; காக் கைக்குத்
திக்கெலா மகிழு மாதே சிலிட்டவ ராள மாமே. (22)

**மைனு, குயில், நாணவந்தான்**

வலக்கையைக் கபித்த மாக்கி மறுகையை யர்த்த சந்த்ரன்
துலக்கவே யாக்கி யப்பாற் சோராமற் கனிட்டந் தன்னைப்
பலக்கவங் குட்டத் தோடே பின்னுதல் குயிலு மின்னும்
நலம்பெறு மைனு வோடே நாணவந் தானுக் காமே. (23)

**கண்டபேரண்டம், வல்லூறு, வலியான்**

கண்டபே ரண்டத் திற்குக் கண்டபே ரண்டக் கையாம் ;
கொண்டவல் லூறுக் காகுங் குயிற்கையி லிடது கையை
விண்டிலா டோள மாக்கல் மேவுமே; வலியா னுக்குச்
கண்டக பித்தந் தன்னிற் கபித்தத்தை நீட்ட லாமே, (24)

**ஆந்தை, கூழைக்கடா, சிட்டுக்குருவி**

ஆந்தைக்குச் சொல்வர் வியாக்ர வஸ்தம்புங் கிதமாய்ச் செய்தல் ;
சேர்ந்தகூ ழைக்க டாய்க்கு வக்ரசிம் மமுக மாகும் ;
கூந்தனேர் மானே ! சிட்டுக் குருவிவ லியான் போலே
நேர்ந்துரை செய்வா யென்றே நிகழ்த்தினர் நூல்வல் லோரே.
(25)

**கோழி, கானுங்கோழி**

கோழிக்குத் தாம்ப்ர சூடங் கூறும் ;கா னுங்கோ ழிக்குப்
பாழிலாப் புங்கி தச்ச லனக்கையாய்ப் பகருங் கண்டாய் ;
வேழமத் தகத்தை நேர்ந்து விம்மிய முலையி னுளே !
வாழிய சலசந் துக்கு வகையினி யுரைசெய் வோமே. (26)

## பறவைகள்

| | | |
|---|---|---|
| 1. | அன்னம் | அம்சாசியம் |
| 2. | கௌதாரி | பாண அஸ்தம் |
| 3. | கிளி | சுகதுண்டம் |
| 4. | கழுகு | ஞான முத்திரை |
| 5. | அன்றில் | சிலிட்ட அலபத்மம் |
| 6. | குயில் | புங்கித அராளம் |
| 7. | ஊர்க்குருவி | சிலிட்ட முட்டி |
| 8. | செம்போத்து | அதோமுகச் சிலிட்ட சுகதுண்டம் |
| 9. | மீன்கொத்தி | சாலேயக்கை |
| 10. | வெண்புறா | கபோதக்கையைக் குறுக்காய்ப் பிடித்தல் |
| 11. | மாடப்புறா | கபோதக்கையைப் புங்கிதமாய்ச் செய்தல் |
| 12. | காட்டுப்புறா | இரண்டு அர்த்த சந்திரக்கைகள் |
| 13. | கொக்கு | சிலிட்ட அம்சாசியக்கை |
| 14. | மின்மினி | அம்சாஸ்யத்தை முகத்தின் நேர் பிடித்தல் |
| 15. | வண்டு | பிரமரக்கை |
| 16. | காகம் | சிலிட்டவராளம் |
| 17. | மைனு | வலக்கையைக் கபித்தமாக்கி, மறு கையை அர்த்த சந்திரனுக்கி, பிறகு சுண்டு விரலைப் பலமாகக் கட்டைவிரலோடு பின்னுதல் |
| 18. | குயில் | (17 போல) |
| 19. | நாணவந்தான் | (17 போல) |
| 20. | கண்டபேரண்டம் | கண்டபேரண்டக்கை |
| 21. | வல்லூறு | குயிற்கையில் இடக்கையை டோளமாக்கல் |
| 22. | வலியான் | கபித்தத்தோடு கபித்தத்தை நீட்டல் |
| 23. | ஆந்தை | வியாக்ர அஸ்தத்தைப் புங்கிதமாய்ச் செய்தல் |
| 24. | கூழைக்கடா | வக்ரசிம்மமுகம் |
| 25. | சிட்டுக்குருவி | வலியான் போன்றது |
| 26. | கோழி | தாம்பிரசூடம் |
| 27. | கானுங்கோழி | மேற்படி கையைப் புங்கிதமாகச் சலனஞ் செய்தல் |

## 5. விலங்குகள்

### சிங்கம், புலி, பன்றி, முட்பன்றி, கரடி

சிங்கமா மிடது சிங்க முகம்வலப் பதாகஞ் சேரில்;
அங்கமி லர்த்த சந்த்ரன் அதோமுகம் புலியாய்ப் போற்றும்;
சங்கீர்ண மகரம் பன்றி; தருகஜ முகமுட் பன்றி;
கொங்கலர் பதாகம் பத்ம கோசமாங் கரடிக் கென்னே. (27)

### எருமைக்கடா, மான், கணத்தி, கடமான்

பேர்சிலிட்ட மிருக சிரத்திற் பெருவிரல் வளைத்தல் மேதி
நேர்மிரு கச்சி ரம்மான்; நிகழுமே கணத்திக் குக்கை
ஓர்லீன முத்தி ரைப்புங் கிதமாகும்; கடமா னுக்குத்
தோர்விலா தர்த்த சந்த்ரன் சுவத்திக மாகச் சாற்றே. (28)

### கவரிமான், ஆண்மான், குரங்கு, நரி

கவரிக்கு முட்டி முத்தி ரைக்கையாம்; ஆண்மா னுக்கு
அவமிலா தாவி ருத்த மிருகசிர மாம்; குரங்கிற்
குவமைய தாகு முட்டி முகுளமே; உறுந ரிக்குப்
புவிதனில் வக்ர சிம்ம முகமெனப் புகலு மாதே. (29)

### பூனை, உடும்பு, கலைமான், கஞ்சு

பூனைக்குக் கைய தாக மத்திம முகுளம் புல்லும்;
ஊனமிற் றலப தாகம் உடும்பிற்காம்; கலைமா னுக்கு
மோனமா முட்டிக் கையிற் கனிபெரு விரலு நீட்டல்;
மானே!க ஞுஞ்சு நாக பந்தமாய் வழுத்து நூலே. (30)

### பெருச்சாளி, எலி, முயல், யானை, நாய்

முகுளமுந் துருவாம்; அர்த்த முகுளமே யெலிய தாகும்;
பகர்முயல் தலப தாகம் பக்கத்திற் பிடித்தல்; யானைக்
குக்கையா மலபத் மம்ம தோமுகம் பிடித்தல்; நாய்க்குப்
பகருவர் பரத நூலிற் சிலிட்டப தாக மென்றே. (31)

### ஒட்டகை, ஆட்டுக்கடா, ரிஷபம், கழுதை

கண்டாஞ்ச லிக்கை யொட்ட கைக்கு; ஆட் டுக்கி டாய்க்கு
ரெண்டுசி கரத்தைக் கூட்டல்; தலசிங்க முகம்வி டைக்கு;
மண்டுபின் ஞஞ்ச லிக்கை கழுதைக்கு வகுத்த லாகும்;
. . . . . . . . . . . . . . . . . . (32)

ஒட்டகத் திற்குச் சொல்லு முத்வேஷ்டி தாஞ்ச லிக்கை;
ஆட்டுக்கி டாய்க்குச் சொத்தி கச்சிக ரக்கை யாகும்;
தேட்டமா மிடபத் திற்குச் சிம்மமு கக்கை யென்னும்
பூட்டிலாக் கழுதைக் காகும் புட்பபு டக்கை யென்றே. (33)

### யாளி

தற்சனி மத்தி மத்தைச் சேர்த்தனு மிகையங் குட்டம்
வற்சமில் லாம லேயுட் புறஞ்சேர்த்து வகைய தாக
மிச்சம தாமி ரண்டு சிறுவிரல் வளைத்துக் காட்ட
நிச்சய மாக யாளிக் காமென நிகழ்த்து வாரே. (34)

### முதலை, பசு, புருஷாமிருகம்

தோணுமு தலைக்குத் தான்ப தாகச்சு வத்தி கக்கை;
ஊனுள பசுவிற் குச்சங் கீர்ணமுத் திரைக்கை யோதும்;
தாணுவாம் புருட ரூபந் தனைக்காட்டி மிருகக் கையைப்
பூணவே பிடித்தா லதனைப் புருஷாமி ருகத்திற் கோதே. (35)

### புள்ளிமான், கலைமான்

செப்புவோ மின்ன மும்ப ரதமுனி மதத்திற் றேர்ந்த
ஒப்பிலா விலங்கு கட்கு ஓதிய வபிந யக்கை
தப்பிய புள்ளி மானின் றனக்குமான் றலைக்கை யாகும்
கைப்புடைக் கலைமா னுக்குக் கஜமுகக் கையென் றோதே. (36)

### வெள்ளாடு, பெருச்சாளி, எலி, ஓணான்

வெள்ளாடு சூசிக் கையாய் விளம்புவர்; பெருச்சா ளிக்கு
விள்ளுமே யர்த்த முட்டி; விசையொடு மெலித னக்குப்
பிள்ளையே கேள்! சி லிட்ட பிரமரம்; ஓணா னுக்குத்
துள்ளிய கரம தாகும் வக்கிர சூசி யென்றே. (37)

### பல்லி, சிலந்திப்பூச்சி, நாய்

ஏச்சிலாப் பல்லிக் குச்சி லிட்டம யூர மாகும்;
வாச்சிலந் திப்பூச் சிசந்தங் கிசக்கை யாகப் பற்று;
மாச்சியாஞ் சிங்கத் திற்கும் யானைக்கு முவமா னஞ்சொல்
பாச்சல்நாய்க் குச்சி லிட்ட பதாகக்கை யாக வோதே. (38)

### பசு, யானை, புலி

பசுவுக்குச் சுரபிக் கையாய்ப் பகருவர் ; யானைக் குக்கை
நிசமதாங் கரியஸ் தம்போல் ; நீட்டிய புலித னக்கு
வசையிலா தோது வர்சு வத்திக மூர்ஞ பக்கை ;
இயையுமிக் கரங்க ளென்றே யியம்பினர் நூல்வல் லோரே.(39)

### யாளி, நரி, முயல், குதிரை

யாளிக்கு வர்த்த சந்த்ர னிரண்டையும் டோள மாக்கல் ;
வாழிய நரிக்குச் சொல்வர் வக்கிரசிம் மமுக மென்றே ;
பாழிலா முயற னக்குப் பகருஞ்சிம் மமுக மென்று ;
மீளிகுதி ரைக்கு மான்ற லேச்சுவத் திகமாய் விள்ளே. (40)

### சரபம்

வலக்கைவி யாக்கி ரத்தைப் புங்கிதஞ் செய்து மற்றும்
சிலைபெறு மிடது கையைச் சிகரம தாக்கி யப்பால்
பலமதா கவேவ்யா விர்த்தம் பிடித்திட லாகு மென்று
நிலைபெறுஞ் சரபத் திற்கு நேர்ந்துரை செய்வாய் மானே. (41)

### விலங்குகள்

1. *சிங்கம்* . *இடக்கைச் சிங்கமுகமும், வலக்கைப் பதாகமும்*
2. *புலி* . *அர்த்த சந்திரனை அதோ முகமாய்ப் பிடித்தல்*
3. *பன்றி* . *சங்கீர்ண மகரம்*
4. *முட்பன்றி* . *கஜமுகம்*
5. *கரடி* . *பதாகம், பத்மகோசம்*
6. *எருமைக்கடா* . *சிலிட்ட மிருகசிரத்தின் பெருவிரலை வளைத்தல்*
7. *மான்* . *மிருகசிரம்*
8. *கணத்தி* . *லீன முத்திரையைப் புங்கிதமாக்குதல்*
9. *கடமான்* . *அர்த்த சந்திரன் ; சுவத்திகம்*
10. *கவரி* . *முட்டி*
11. *ஆண்மான்* . *ஆவிருத்த மிருகசிரம்*
12. *குரங்கு* . *முட்டிமுகுளம்*
13. *நரி* . *வக்ரசிம்மமுகம்*

14. பூனை . மத்திம முகுளம்
15. உடும்பு . தலபதாகம்
16. கலைமான் . முட்டிக்கையில் சுண்டு விரலையும் பெரு விரலையும் நீட்டல்
17. கணுஞ்சு . நாகபந்தம்
18. பெரிச்சாளி . முகுளம்
19. எலி . அர்த்த முகுளம்
20. முயல் . தலபதாகம் பக்கத்தில் பிடித்தல்
21. யானை . அலபத்மம் அதோமுகம் பிடித்தல்
22. நாய் . சிலிட்டபதாகம்
23. ஒட்டகை . அஞ்சலிக்கை
24. ஆட்டுக்கிடாய் . இரண்டு சிகரக்கைகளைக் கூட்டல்
25. ரிஷபம் . தலசிங்கமுகம்
26. கழுதை . அஞ்சலிக்கை
27. ஒட்டகம் . உத்வேஷ்டித அஞ்சலிக்கை
28. ஆட்டுக்கடா . சொத்திகச் சிகரக்கை
29. ரிஷபம் . சிம்மமுகக்கை
30. கழுதை . புட்பபுடக்கை
31. யாளி . சுட்டுவிரல், நடுவிரலைச் சேர்த்து அதன் உட்புறத்துள் இடைவெளி யின்றி, மோதிரவிரல், கட்டைவிரல் இவற்றைச் சேர்த்து, சிறுவிரலை வளைத்து இவ்விதம் இரண்டு கைகளையும் செய்தல்
32. முதலை . பதாகச் சுவத்திகம்
33. பசு . சங்கீர்ண முத்திரைக்கை
34. புருஷாமிருகம் . புருடரூபம் காட்டி, மிருகக்கை பிடித்தல்
35. புள்ளிமான் . மான் தலைக்கை
36. கலைமான் . கஜமுகக்கை
37. வெள்ளாடு . சூசிக்கை
38. பெருச்சாளி . அர்த்த முஷ்டி
39. எலி . சிலிட்ட பிரமரம்
40. ஓணான் . வக்கிரசூசி
41. பல்லி . சிலிட்ட மயூரம்
42. சிலந்திப்பூச்சி . சந்தம்சம்
43. நாய் . சிலிட்டபதாகம்

44. பசு . சுரபிக்கை
45. யானை . கரியஸ்தம்
46. புலி . சுவத்திக பூர்ணநாபக்கை
47. யாளி . அர்த்த சந்திரன் இரண்டையும் டோளமாக்குதல்
48. நரி . வக்கிர சிம்மமுகம்
49. முயல் . சிம்மமுகம்
50. குதிரை . மான்தலைச் சுவத்திகம்
51. சரபம் . வலக்கையை வியாக்கிரமாக்கிப் புங்கிதம் செய்து, இடக்கையைச் சிகரமாக்கி வியாவிருத்தம் பிடித்தல்.

குறிப்பு: இங்கு 51 விலங்குகள் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் சில திருப்பிக் கூறப்பட்டுள்ளன காண்க. அவை மதாந்தரங்கள்.

## 6. மனிதப் பகுதி

### மானிடர் - பொது

தானமாம் இரண்டு கையைச் சந்தம்ச மாகக் கூட்டி,
ஈனமில் வலக்கை தன்னை இரண்டுமூன் றுதரங் கீழாய்த்
தானேக்கி, அக்க ரத்தைச் சலனம தாகச் செய்தல்
நேருறப் பரத நூலோர் நிகழ்த்தினர் முறைதெ ரிந்தே. (42)

மானிடர்—இரண்டு கைகளைச் சந்தம்சமாகச் செய்து, வலக்கையை இரண்டு மூன்று தடவைகள் கீழ்நோக்கிச் சலனமாகச் செய்தல்.

### நாயகிகள்

#### (1) மடந்தையர்

#### குலமடந்தை

இடதமு சாசி யத்தைக் கழுத்தில்வைத் தேவ லக்கைப்
படிபரி வர்த்த மாகப் பதாகத்தைப் பிடித்தல் சொந்தக்
குடிவாழ்த் தாலி கட்டிக் கொண்டப திவிர தைக்கு
அடுமெனப் பரத நூலோ ரறைந்தன ரறிந்து கொள்ளே. (43)

### அயல் மடந்தை

கலியாணம் செய்து கொண்ட கணவனை நீங்கி வேறே
கொழுநனைத் தேடிக் கூடுங் கோதைக்குக் கலவிக் கையைப்
பலங்காட்டி வலக்கை தன்னைப் பரிவிர்த்த பதாகம் பற்றல்
செலுமெனப் பரத நூலோர் தேர்ந்துரை செய்தார் மானே! (44)

### விலை மடந்தை

கடகாமு கக்கை சுண்டிக் கலவியைக் காட்டி யேயப்
படிவலம் பரிவர்த் தப்ப தாகமா யபிந யித்தல்
வடிவுள விலைமா தர்க்கு வகுத்திட லாகு மென்று
திடமதாய்ப் பரதங் கற்ற சிறப்புளோ ருரைசெய் தாரே. (45)

### (1) மடந்தையர்

குலமடந்தை—(*முறையே மணந்த மனைவி*): *இடக்கை அமுசாசியத்தைக் கழுத்தில் வைத்து, வலக்கையால் பரிவர்த்தமாகப் பதாகத்தைப் பிடித்தல்.*

அயல் மடந்தை—(*மணம் புரிந்தவனை விட்டு அந்நியனை நாடுபவள்*): *கலவிக் கையைப் பலங்காட்டி (?) வலக்கையைப் பரிவர்த்தபதாகம் பற்றல்.*

விலைமடந்தை—(*பரத்தையர்*): *கடகாமுகக் கையைச் சுண்டி (?) கலவிக் கையை (?) க்காட்டி வலக்கையைப் பரிவர்த்தபதாகமாய்க் காட்டல்.*

### (2) நற்சாதிப் பெண்கள்

### பதுமினி, சித்தினி

சட்சதை வதங்கள் கோருஞ் சதுரையாம் பதுமி னிக்கு
பட்சமாஞ் சுகதுண் டக்கை யபவேஷ்டி தமதாய்ப் பற்றல் ;
உச்சரி ஷபாநி ஷாதங் கோருஞ் சித்தினிக் குலைதும்
மெச்சிய பரத நூலின் மிருகசீ ரடக்கை யென்றே. (46)

### சங்கினி, அத்தினி

பஞ்சம மத்தி மங்கள் பற்றிய சங்கி னிக்கு
வஞ்சிடா தம்ஸ பட்ச மபவேஷ்டி தம்பி டித்தல் ;
கொஞ்சுகாந் தாரங் கோருங் கோதையா மத்தி னிக்குத்
தஞ்சம தாக வர்த்த சதுரக்கை பிடித்த லாமே. (47)

இன்னமிம் மாத ருக்கு வியல்பதாங் கோவை பற்றிப்
பொன்னல பல்ல வத்தை நெற்றியும் புயமு மார்பும்
நன்னய நாபி யும்மிவ் விதமாக நயந்து காட்டல்
மன்னுமென் றறைந்தார் நந்தி கேச்சுரர் வகைய றிந்தே. (48)

(2) நற்சாதிப் பெண்கள்

பதுமினி—(*சட்ஜம், தைவதம் இவற்றிற்குரியவள்*)—*சுக துண்டக்கையை அபவேஷ்டிதமாய்ப் பற்றல்.*

சித்தினி—(*ரிஷபம், நிஷாதங்களுக்குரியவள்*)—*மிருகசீரிடக் கை பற்றல்.*

சங்கினி—(*பஞ்சம, மத்திமங்களுக்குரியவள்*)—*அம்ஸ பட்சத்தை அபவேஷ்டிதமாகப் பிடித்தல்.*

அத்தினி—(*காந்தாரத்துக் குரியவள்*)—*அர்த்த சதுரக்கை.*

வேறொரு வகை: *அலபல்லவத்தை, நெற்றி, புயம், மார்பு, நாபி இவற்றில் முறையே வைத்துக் காட்டல்.*

*இது, நந்திகேசுவரர் கூறியது.*

## அஷ்டவித நாயகிகள்

### சுவாதீனபதிகா

நினைத்ததை முடிக்கு நாய கனைக்கொண்டே நேரி ழைக்குச்
சினமிலா வலக்கை தன்னிற் றிரிலிங்க முட்டி காட்டிப்
பினும்சிக ரம்ப தாகம் பரிவர்த்தம் பிடித்துக் காட்ட
மனுமெனப் பரத நூலோர் வகுத்துரை செய்தார் மானே. (49)

### வாஸகஸஜ்ஜிகா

குணமுடன் பள்ளிநின்று கொழுநன்றன் வரவைப் பார்க்கும்
வனிதைக்குச் சிகரங் காட்டி மற்றும்ப தாகந் தன்னைத்
தனிநேர்புங் கிதம தாகச் சலனஞ்செய் தேதி ரும்பப்
பனிநிகர் மொழியி னுளே ! பதாகத்தைப் பிடிப்ப தாமே. (50)

### விரஹோத்கண்டிதா

நாயகன் றன்னைச் சேர விரகத்தைக் கொள்ளு நங்கை
தாயக மாக நெஞ்சிற் சந்தம்சம் பிடித்து மற்றும்
சாயாமற் பரிவிர்த் தப்ப தாகத்தைப் பிடிப்ப தென்றே
நேயமாய்ப் பரத நூலோர் நீணிலத் துரைசெய் தாரே. (51)

**விப்ரலப்தா**

நாதன்செய் மோச மெண்ணி நற்சகி யைக்கோ பிக்கும்
பேதைக்கு வர்த்த சந்த்ரன் பிடித்துவி ரித்துப் பின்னும்
காதலாய்த் தணித்துக் கோத்துக் கடுமையா முகத்திஞேடே
மாதேமுன் போற்ப தாக மாகவே பிடித்த லாமே. (52)

**கண்டிதா**

ஏலத்தன் கொழுநன் வேறே யேந்திழை கூடி யந்தக்
காலேவந் தவனேக் கண்டு கண்டிக்கு மாத ருக்கு
மாலிடஞ் சிகர மாக்கி வலம்வ்யாவிர்த் தப்ப தாகம்
கோலமாய்க் கண்டித் துப்பின் ஞயகி தரத்தைக் கொள்ளே.
(53)

**கலகாந்தரிதா**

மணவாளன் றனேக்கோ பித்துத் துரத்திப்பின் மயங்கு மங்கை
மணியிடஞ் சிகரம் மற்றிவ் வலப்பதா கத்தா னீக்கி
அணியப்பின் கற்க டத்தை யதோமுக மாய்க்க விழ்த்துப்
பணியவே பரிவர்த் தம்ப தாகத்தைப் பற்ற லாமே. (54)

**ப்ரோஷித பர்த்ருகா**

ஊர்சென்ற கணவன் றன்னே நினேந்துரு கும்பே தைக்கும்
சேராமற் சிகரம் பற்றிச் சூசிக்கை யால்வ்யா விர்த்தம்
மீறுமற் காட்டி யப்பால் விரகக்கை தன்னேக் காட்டல்
தேருமென் றுலகிற் காணச் செப்பினர் நூல்வல் லோரே. (55)

**அபிஸாரிகா**

கொழுநனேக் குறித்துச் செல்லுங் கோதைக் கிருகை டோளம்
குழைவிலா தாக்கி மேனி குலுங்கியே நடந்து காட்டல்
பழியாமற் காட்டி யந்தப் பரிவிர்த்த பதாகம் பற்றல்
உழவெனப் பரத நூலோ ரோதின ரறிந்து கொள்ளே. (56)

மற்றநா யகிக ளுக்கு வழுத்துவர் பானு தத்தன்
சொற்றவ் வடநூ லின்மஞ் சரிதனே யறிந்த வர்க்கே
உற்றிடும் பக்கு வம்ப ருவங்கண் டபிந யித்தல்
பற்றுமென் றுரைத்தார் மெய்யாம் பரதநூ லுணர்ந்தே மேலோர். (57)

### அஷ்டவித நாயகிகள்

எட்டுவித நாயகிகளின் பெயர்களைப் பின் வருமாறு அமைக்கும்—(1) வாஸகஸஜ்ஜிகா, (2) விரஹோத்கண்டிதா, (3) ஸ்வாதீனபர்த்ருகா, (4) கலஹாந்தரிதா, (5) கண்டிதா, (6) விப்ரலப்தா, (7) ப்ரோஷிதபர்த்ருகா, (8) அபிஸாரிகா.

1. **சுவாதீனபதிகா** (நினைத்ததை நாயகனைக் கொண்டு முடிப்பவள்)—வலக்கையில் திரிலிங்கமுட்டி காட்டி, பிறகு சிகரம், பதாகபரிவர்த்தம் பிடித்துக் காட்டல்.

2. **வாஸகஸஜ்ஜிகா** (கூட்டத்துக்குத் தயாரித்துக் கொண்டவள்)—படுக்கையில் இருந்துகொண்டு கணவன் வரவை எதிர் பார்ப்பவள்—. சிகரம் காட்டி, பதாகத்தை நேர்புங்கிதமாகச் சலனம் செய்தே, திரும்பப் பதாகத்தைப் பிடிப்பது.

3. **விரஹோத்கண்டிதா** (கணவன் பிரிவால் வருந்துபவள்)—நாயகனைச்சேர விரகங் கொள்பவள்—. நெஞ்சுக்கு நேரே சந்தம்சம் பிடித்து, மற்றும், சாயாமல் பரிவர்த்தபதாகம் பிடித்தல்.

4. **விப்ரலப்தா** (கணவனால் மோசம் செய்யப்பட்டவள்)—நாதன் செய்த மோசத்தை எண்ணிச் சகியைக் கோபிப்பவள்—, அர்த்த சந்திரனைப் பிடித்து விரித்துப் பிறகு, காதலாய்த் தணித்துக் கோத்து, கடுமையான முகத்தோடே முன்போல் பதாகமே பிடித்தல்.

5. **கண்டிதா** (காதலனோடு கோபிப்பவள்)—வேறொருத்தியோடு கூடிக் காலையில் வந்த கொழுநனைக் கண்டு கோபிப்பவள்—, இடம் சிகரமாக்கி, வலம் வியாவிருத்த பதாகம் பிடித்தல்.

6. **கலகாந்தரிதா** (கணவனிடமிருந்து கலகத்தால் பிரிந்தவள்)—கணவனைக் கோபித்து அவனைத் துரத்திப் பிறகு மயங்குபவள்—. இடக்கையில் சிகரம் வைத்து, அதனை வலக்கைப் பதாகத்தால் நீக்கி, பிறகு கற்கடகத்தை அதோமுகமாய்க் கவிழ்த்து, பிறகு பரிவர்த்தபதாகத்தைப் பற்றல்.

7. **ப்ரோஷிதபர்த்ருகா** (கணவனைப் பிரிந்துள்ளவள்)—ஊர் சென்ற கணவனைப் பிரிந்துருகுபவள்—. சிகரம் பற்றி, சூசிக் கையால் வியாவிருத்தம் காட்டி, அப்பால் விரகக்கை காட்டல்.

8. **அபிஸாரிகா** *(காதலனை நோக்கி நகர்பவள்)*—*கணவனைக் குறித்துச் செல்பவள்—. இரு கைகளையும் டோளமாக்கி, மேனி குலுங்கியே நடந்து காட்டி, பிறகு பரிவர்த்த பதாகம் பற்றல்.*

*மற்ற நாயகிகள்: அவரவர் பக்குவம், பருவங்கண்டு,* **பானுதத்தன்** *இயற்றிய மஞ்சரி* **(ரஸமஞ்சரி)** *என்ற வடநூலில் உள்ளபடி அபிநயித்தல்.*

## நாயகர்கள்

### நால்வகை முதல்வர்

#### கூஷ்மாரன், பாஞ்சாலன்

**மாசிலா அராளக் கையை மார்புநேற் பிடித்துக் காட்டக்**
**கூசிமா ரனுக்கா மென்றே கூறுவர் சுகதுண் டக்கை**
**நேசம தாகப் பற்றி நெற்றிநேர் பிடித்துக் காட்டப்**
**பேசுவ ரதைப்பாஞ் சாலன் றனக்கெனப் பேதை மாதே.** (58)

#### பத்திரன், தத்தன்

**பத்திரன் றனக்கு முட்டிக் கரமார்பு நேராய்ப் பற்றல்**
**புத்திசேர் தத்த னுக்குச் சிகரக்கைப் புயத்தி னேரே**
**வைத்திட லாகு மென்று மாநிலத் தோர்கள் காண**
**அத்தங்கள் பிடிப்ப வர்க்கா யறைந்தனர் நூல்வல் லோரே.** (59)

#### நால்வகை முதல்வர்

**கூஷ்மாரன்**—*அராளக் கையை மார்பு நேர் பிடித்துக் காட்டல்.*

**பாஞ்சாலன்**—*சுகதுண்டக்கையை நெற்றி நேர் பிடித்துக் காட்டல்.*

**பத்திரன்**—*முட்டிக்கையை மார்பு நேராகப் பற்றல்.*

**தத்தன்**—*சிகரக்கையைப் புயத்தின் நேரே வைத்தல்.*

## மூவித நாயகர்கள்

### பதி, உமாபதி

பேசுவாய் பதிக்குச் சொந்தப் பேதைகை காட்டி யப்பால்
மாசிலாச் சிகரக் கையை மகிழ்வுடன் பிடித்த லாகும்
நேசமா முமாப திக்க யல்மின்கை காட்டி நேரே
தேசிக சிகரக் கையைப் பிடிப்பதா மெனவே செப்பே. (60)

### வைசிகன் அபிநயம்

செப்புவாய் வைசி கன்ற னக்குவே சிப்பெண் கையை
ஒப்புடன் காட்டி யேசி கரம்பிடித் திடலே யோதும்
மைப்படி குழலி ஞளே மற்றநா யகர்க ளுக்குத்
துப்புற வவர்கு ணங்கள் துலங்கமேற் காட்டு மாதே. (61)

### மூவித நாயகர்கள்

பதி—*சொந்த மனைவிக்குரிய கைகாட்டி, அப்பால் சிகரக் கையைப் பிடித்தல்.*

உமாபதி—*அயல் பெண்ணுக்குரிய கைகாட்டி, தேசிகச் சிகரக்கையைப் பிடித்தல்.*

வைசிகன்—*வேசிப்பெண்ணுக்குரிய கைகாட்டி, சிகரம் பிடித்திடல்.*

மற்றவர்—*அவரவர் குணங்கள் துலங்கக் காட்டுதல்.*

## அரசர்கள்

### அரிச்சந்திரன், நளன், புரூரவன்

திருவரிச் சந்தி ரற்குச் செப்புவர் சுகதுண் டக்கை;
இரவிநேர் நளன்ற னக்கு விடமுடுக் குவல மஞ்ஞை;
அருள்புரு ரவருக் கத்த மாம்வலத் தினின்முட் டிக்கை
தெரிவையே யிடது கையிற் றிரள்பத்ம கோசம் பற்றே. (62)

### சகரன், இராவணன், அம்பரீஷன், சிபி

கோசல சக்ரர்க் கத்தங் கொளுமிரு கைப்ப தாகை;
மாசில்ரா வணன்ப தாகை வகுத்தனர்; அம்ப ரீஷன்
நேசஞ்சேர் சிகரக் கையாய் நிகழ்த்துவர்; சிபித னக்குப்
பேசுவர் கபித்த மென்றே பிறைநுதற் கமல மாதே! (63)

### கர்ணன், அருச்சுனன், பீமன், சகாதேவன்

மாதேகேள் கர்ண னுக்கு வழுத்துவர் முகுளக் கையாய்;
மேதினி யருச்சு னற்கு விளம்பினர் திரிப தாகை;
கோதிலா வீம னுக்குக் கூறுவர் முட்டிக் கையாய்;
நீதிசேர் சகாதே வர்க்கு நிகழ்த்துவர் மகர மென்றே. (64)

### நகுலன், பகிரதன், நந்தி, ரகு

மகரஞ்சேர் நகுல னுக்கு வகுத்தனர் தாம்ப்ர சூடம்;
பகிரத னர்த்த சந்திரன்; பகர்நந்தி வலது கையில்
சுகமுறு முகுள மோடு சூசியா மிடது கையில்;
தகைமைசேர் ரகுப தாகை சாற்றினர் பரத நூலோர். (65)

### தசரதன், ராமன், பரதன்

பரதநூற் றசர தற்குப் பகரல பதுமக் கையைத்
திரமதா யுத்வேஷ் டித்துச் சேர்த்தசொத் திக்கை யென்றே;
முறைவரி ராம னுக்கு முற்றிலுஞ் சிகரக் கையாய்த்
தெரிவையே! வலது தோண்மேற் சிகரக்கை பரதற் காமே.
(66)

### இலக்குமணன், சத்துருக்கன், சேரன்

மேலதாஞ் சத்து ருக்க னிடதுதோள் சிகர மேவிச்
சாலிலக் குமன்ற னக்கு மார்புநேர் சிகரஞ் சாற்று;
ஓலமாஞ் சேர னுக்கு வுத்தான வஞ்சி தத்தோ
டேலவே வலது கையில் டமருக மென்ன வுன்னே. (67)

### சோழன், பாண்டியன்

உன்னவே சோழ னுக்கு வுத்தான வஞ்சி தத்தோ
டன்னமே! இடஞ்சி லிட்ட முகுளமாம், வலது கையில்
சொனசங் தம்ஸ மாகும்; தூயபாண் டியனுக் கத்தம்
மன்னுமுத் தான வஞ்சி தச்சுக துண்டஞ் சொஸ்தி. (68)

### தருமன், துரியோதனன்

சொத்திசேர் பரத நூலோர் சொலுவ ரரசர்க் கெல்லாம்
மொத்தமாய்த் தசர தற்கு மொழிந்தல பதுமக் கையே;
நித்தமாங் தரும னுக்கு நிகழ்த்துவ ரலபத் மக்கை;
பத்திலாச் சுயோத னன்ருன் பாபக்கை யலபத் மம்மே. (69)

### புருகுச்சன், திலீபன், பயராசன், மருத்து

மேற்சொலு மரச ரோடே விளம்புரு குச்ச னுக்கு
வார்சது டமரு கக்கை; வருதிலீ பன்ப தாகம்;
தேர்ச்சியாம் பயரா சன்சூ சிக்கையாம்; மருத்து முட்டி
கூச்சமில் லாதே காட்டக் கொளுமெனச் சொல்வாய் மாதே.
(70)

### யயாதி, ரந்திதேவன்

தாதலர் யயாதிக் குக்கை தாம்பிர சூட மாகும்;
நீதிசேர் ரந்தி தேவன் முகுளஞ்சூ சிக்கை நேரும்;
கோதிலா திந்த மன்னர்க் குச்சுக்கி ரன்ம தத்தில்
ஓதுமிப் பயனைக் கண்டு உரைசெய்வாய் கமல மாதே. (71)

### இரவிகுலத்தரசர், இந்துகுலத்தரசர், பொது

இரவிகு லத்து மன்னர்க் கியல்வலப் புறத்தி னேரே
பரவிய சசிகு லத்துப் பார்வேந்தர்க் கிடத்தோ ணேரே
பெருமையா யபிந யித்தாற் பிசகிலா திருக்கு மென்று
பிருகும தத்திற் ருனே பேசின னறிந்து கொள்ளே. (72)

### அரசர்கள்

1. அரிச்சந்திரன் . சுக துண்டம்
2. நளன் . இடக்கை உடுக்குக்குரிய கை, வலக்கை மயில்
3. புரூரவன் . வலக்கை முஷ்டி, இடக்கை பதும கோசம்
4. சகரன் . இரு கைகளும் பதாகங்கள்
5. இராவணன் . பதாகம்
6. அம்பரீஷன் . சிகரம்
7. சிபி . கபித்தம்
8. கர்ணன் . முகுளம்
9. அருச்சுனன் . திரிபதாகை
10. பீமன் . முஷ்டி
11. சகாதேவன் . மகரம்
12. நகுலன் . தாம்பிரசூடம்
13. பகீரதன் . அர்த்தசந்திரன்
14. நந்தி . வலக்கையில் முகுளம் ; இடக்கை சூசி
15. ரகு . பதாகம்
16. தசரதன் . அலபதுமக்கையை உத்வேஷ்டித்துச் சேர்த்த சொத்திகக்கை
17. இராமன் . சிகரம்
18. பரதன் . வலத்தோள்மேல் சிகரக்கை வைத்தல்
19. இலக்குமணன் . மார்பு நேர் சிகரம்
20. சத்ருக்னன் . இடத்தோள் சிகரம்
21. சேரன் . உத்தான வஞ்சிதத்தோடு வலக்கை டமருகம்
22. சோழன் . உத்தானவஞ்சிதத்தோடு இடம் சிலிட்ட முகுளம், வலம் சந்தம்சமாகும்
23. பாண்டியன் . உத்தானவஞ்சிதம், சுகதுண்டம் ; சுவத்திகம்
24. தருமன் . அலபதுமம்
25. துரியோதனன் . அலபதுமம்
26. புருகுச்சன் . டமருகம்
27. திலீபன் . பதாகம்
28. பயராசன் . சூசி

29. மருத்து . முஷ்டி
30. யயாதி . தாம்பிரசூடம்
31. ரந்திதேவன் . முகுளம், சூசிக்கை
32. இரவிகுல மன்னர் . வலப்புறத்தின் நேர் அபிநயம் செய்தல்
இந்துகுலத்து மன்னர் . . இடத்தோள் நேரே அபிநயம் செய்தல்

**பிற அரசர்க்கெல்லாம், தசரதர்க்கு உரைத்த கையே.**

*இவை, சுக்கிர மதம்.*

### அரசச் சின்னங்கள்

**சிம்மாசனம், கட்டில், நாற்காலி, சிவிகை**

**இருசது ரத்தி ரண்டு தற்சனி நீக்க யேற்கக்**
**கரமீது கரமி யற்றற் காட்டுஞ்சிங் காச னம்;சீர்**
**வருமீது நாற்கா லுக்கும் மகிழ்பெறு மஞ்சத் திற்கும்**
**பெருவிர லிரண்டு நீளிற் பேர்சி விகைக்கு மாமே. (73)**

சிங்காதனம் : *இரண்டு சதுரக்கைகளில் தர்ச்சனிகளை நீங்கி ஒரு கை மீது ஒரு கை வைத்துக் காட்டல்.*

நாற்காலி, சிவிகை, மஞ்சம்: *கைகளில் கட்டை விரல்கள் நீள்வது.*

## 7. நவரசம்

**நகை, துக்கம், இளிவரல், மருட்கை, அச்சம், பெருமை**

**நகைக்கல பதுமக் கையாம் ; நாடிய துக்கத் திற்குத்**
**தகுமுட்டிக் கைய தாகும் ; இளிவரலே சூசி சாற்றும் ;**
**மிகுமருட் கைப்ப தாகை ; அச்சம்வண் டுக்கை; விள்ளும்**
**மகிமைசேர் பெருமைக் காகு மிருகசீ ரிடக்கை மானே. (74)**

**வீரம், உவகை, சாந்தி**

**வீரர சந்த னக்கு டமருக மாக விள்ளும் ;**
**பாரினி லுவகைக் காகும் பகர்கீல கக்கை யென்றே ;**
**ஆறிய சாந்த மாமி ரசந்தனக் கபயக் கையாய்ச்**
**சீருள வடிவின் மாதே ! செப்புவை முறைதெ ரிந்தே. (75)**

நவரசங்கள்

| | சுவை | கை | | சுவை | கை |
|---|---|---|---|---|---|
| 1. | நகை | அலபதுமம் | 6. | பெருமை | மிருகசீரிடம் |
| 2. | துக்கம் | முஷ்டி | 7. | வீரம் | டமருகம் |
| 3. | இளிவரல் | சூசி | 8. | உவகை | கிலகம் |
| 4. | மருட்கை | பதாகம் | 9. | சாந்தி | அபயம் |
| 5. | அச்சம் | வண்டு | | | |

## நவரசாபிநயம்

சிங்கார மலபதுமம் ; ரேகாசந்த்ரன் செலும்வீரம் ;
தருபதாகங் கருணை ; முகுளம்
மங்காத வற்புதம்;சந் தம்ஸமாஸ்ய மருவுமே ;
அம்சாஸ்யம் பயம்;ஊர் ணபங்
தங்காத பீபச்சம் ; திரிபதாகங் தன்னுடன்
கர்த்தரி ரவுத்ரம்;சு கதுண்டந்தான்
இங்கிதமாம் சமமம்ச பட்சமென் றியம்பினன்
முன்பரதா சாரிய ஞராய்ந்தே. (76)

நவரசங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | சிங்காரம் | அலபத்மம் | 6. | பயம் | அம்சாசியம் |
| 2. | வீரம் | ரேகாசந்திரம் | 7. | பீபத்ஸம் | பூர்ணநாபம் |
| 3. | கருணை | பதாகம் | 8. | ரவுத்ரம் | திரிபதாகமும் கர்த்தரியும் |
| 4. | அற்புதம் | முகுளம் | | | |
| 5. | ஹாஸ்யம் | சந்தம்சம் | 9. | சமம் | சுகதுண்டம் அம்சபக்ஷம் |

இவை பரதாசாரியன் கூறியவை.

## 8. சர்வாங்க அபிநயம்

கருதுபா தம்நெற்றி யாம்பதா கம்;குதிக்
காலிடை கழுத்து முட்டி ;
கணைக்கால் கபோத மாகும்;ச டைமுழங்
கால்கமுக் கூட தாகுங்

கமழர்த்த சந்த்ரன் ; துடைகரித் துடைச்சந்து
கடகா முகக்கை யாகும் ;
காணுக்குத் தலமதமு சாசியம் ; ஆண்குறிக்
காகு மிருகச் சென்னியே ;
மருவுபீ சமிரண்டு திரிபதா கம்;குட்சி
வளரதோ முகக்க போதம் ;
மன்னுங் கணுப்புப்பல் வரிசைசுக துண்டமாம் ;
வளர்நாபி பார்வை புருவம்
வசியா முதடுநற் குணநாசி புத்திக்கு
வாய்த்திடுஞ் சூசி முகமாம் ;
மன்னுளாங் காதுக்குச் சந்தம் சமாம்;ரோம
வரைசர்ப்ப சிரமும் ; மார்பு
பொருதுசுவத் திகம்;முலை யினுனி தாணுய்ப்
பொருந்துமே முகுளம் ; முலைதான்
புல்பதும கோசமாய்; கன்னமுன் னெற்றிமயிர்
மூட்டுமே திரிப தாகம் ;
புவிநீளு மயிர்க்கத் தரிசொத்தி கம்;கொண்டை
போலு மேயல பல்லவம் ;
பொலிவா மனேவிகா ரங்கள்கர்த் தரி;வார்த்தை
பூங்களச் சந்தம் சமாம் ;
விருதுபெற் றுளிருநகங் களுக்கா முகுளம் ;
விசையான பாண முடனே
மேன்மைபெற் றிடுதிரி பதாகமுங் கூட்டியிது
வெல்லா வுறுப்பு கட்கு
மீளாப்பொ ருந்துமென நந்தியின் மதந்தனில்
விண்டன னுலக றியவே
மீனைப் பழித்தவிழி வேலைப் பழித்தகடை
மேவற்பு தப்பெண் ணரசே ! (77)

சர்வாங்கம்

| பாதம் }<br>நெற்றி } | பதாகம் | காது<br>ரோம வரிசை | சந்தம்சம்<br>சர்ப்பசிரம் |
|---|---|---|---|

| | | | |
|---|---|---|---|
| குதிகால் இடை கழுத்து | முஷ்டி | மார்பு | சுவத்திகம் |
| | | முலை நுனி | முகுளம் |
| | | முலை | பதுமகோசம் |
| கணைக்கால் | கபோதம் | கன்னம் முன்நெற்றி மயிர் மூட்டு | திரிபதாகம் |
| சடை முழங்கால் கமுக்கு | அர்த்த சந்திரன் | | |
| | | கூந்தல் | கர்த்தரீ சுவத்திகம் |
| துடை துடைச் சந்து | கடகாமுகம் | கொண்டை | அலபல்லவம் |
| நாக்கு | அமுசாசயம் | மனோவிகாரங்கள் | கர்த்தரி |
| ஆண்குறி | மிருகசிரம் | | |
| பீசம் இரண்டு | திரிபதாகம் | வார்த்தை | சந்தம்சம் |
| வயிறு | அதோமுகக் கபோதம் | நகங்கள் | முகுளம் |
| | | பிற | பாணம், திரிபதாகம் முதலியன |
| பல்வரிசை | சுகதுண்டம் | | |
| நாபி கண் புருவம் உதடு நாசி புத்தி | சூசிமுகம் | | |

இவை நந்தியின் மதம்.

## 9. சாஸ்திரம்

**முன்னிரு சதுரக் கையை முகத்தினேர் நீட்டிக் காட்டி**
**மன்னிய திரிலிங் கக்கை வாய்க்குநேர் விரித்துக் காட்டத்**
**தன்னிகர் பரத நூலோர் சாத்திர மென்ப தற்குப்**
**பன்னியே யுரைத்தா ரந்தப் பனுவலை யறிந்து கொள்ளே.** (78)

**சாஸ்திரம் :** *முன்னே இரு சதுரக்கைகளை முகத்தின் நேர் நீட்டிக் காட்டி, பிறகு திரிலிங்கக் கையை வாய்க்கு நேர் விரித்துக் காட்டுதல்.*

## 10. சிவகணங்கள்

### வீரபத்திரன்

தார்வலக் கையுத் வேஷ்டி தச்சிக ரம்மி டக்கைச்
சீரதோ முகமுட் டிக்கை வலக்காலேத் தூக்கிச் சேரக்
கூருட னிடக்கா றன்னேக் குஞ்சித மாக வைத்தால்
வீரபத் திரனுக் கென்று விண்டனர் பரத நூலோர். (79)

### ஐயனர்

இடதுகைப் பதும கோசம் வலங்கட காமு கத்தின்
தடங்தெரி யுஞ்ச மதிஷ்டி சதுரஸ்ர மாய்ப்பி டித்தால்
திடம்பெறு சாத்த னுக்குச் செலுமெனப் பரத நூலோர்
மடமைசேர் மனத்தி னளே வழுத்தினர் முறைதெ ரிங்தே.(80)

### க்ஷேத்திரபாலகன்

சூத்திர வலதுமுட்டி யுயர்த்தியே சூழ்ந்தி டக்கை
பூத்திடும் டோள மாக்கிப் பொருந்தவே சாய்ந்த பார்வை
பார்த்திடற் குரூர திஷ்டி பயிற்றிடப் பரத நூலோர்
க்ஷேத்திர பால ரூபஞ் சிறக்குமென் றுரைசெய் தாரே. (81)

### வைரவன், துவாரபாலகர்

மருவிடம் பதும கோசம் வலந்திரி சூலம் பற்றப்
பெருகிய வடுகன் ரூேற்றம் பேணுமாம்; நடன பாதம்
கருவிடம் பதும கோசம் வலக்கையை டோளங் காட்டில்
குருவருள் துவார பாலர்க் காமெனக் கூறு மாதே. (82)

### தெக்கணுமூர்த்தி, நந்தி

வலதுகைச் செபச ரத்தி னிடக்கைடோ ளமதாய் வைத்தல்
இலகிய தெக்க ணுமூர்த் திக்கென்பர்; வலக்கை சூசிப்
பலனிடங் திரிப தாக மாகவே பிடித்துக் காட்டில்
நிலேயுள நந்திக் கென்று நிகழ்த்தினர் நூல்வல் லோரே. (83)

### சண்டேச்சுரன், துர்க்கை

இடங்கட காமு கம்வைத் தெழில்வலஞ் சூசி யாய்ப்பற்
றிடச்சண்டேச் சுரனும்; வாமஞ் சிகரமாய் வலக்கை தன்னைக்
கடகா முகம்பி டித்துக் கழுத்துமட் டுநடத்தி யப்பால்
அடவுடன் காட்டிற் றுர்க்கைக் காமென வுரைசெய் மானே!
(84)

### சிவகணங்கள்

1. **வீரபத்திரன்:** *வலக்கை உத்வேஷ்டிதச் சிகரம், இடக்கை அதோமுக முட்டிக்கை; இவ்வாறு கைகளை அமைத்துக் கொண்டு, வலக்காலைத் தூக்கி, இடக்காலைக் குஞ்சிதமாக வைத்தல்.*

2. **ஐயனார்:** *இடக்கை பதுமகோசம், வலம் கடகாமுகம்: இவ்வாறு வைத்து சமதிருஷ்டியுடன் சதுரஸ்ரமாய்ப் பிடித்தல்.*

3. **க்ஷேத்திரபாலகன்:** *வலக்கை முஷ்டியாக உயர்த்தி, இடக்கை டோளமாக்கிச் சாய்ந்த பார்வையாய்க் குரூரதிருஷ்டியாகப் பார்த்தல்.*

4. **பைரவர்:** *இடக்கை பதுமகோசம், வலக்கை திரிசூலமாகப் பற்றல்.*

5. **துவாரபாலகர்:** *இடக்கை பதுமகோசம், வலக்கை டோளம் பிடித்தல்.*

6. **தக்ஷிணாமூர்த்தி:** *வலக்கையில் ஜபசரம், இடக்கை டோளம்.*

7. **நந்தி:** *வலக்கை சூசி, இடக்கை திரிபதாகம்.*

8. **சண்டேசுவரன்:** *இடக்கை கடகாமுகம், வலக்கை சூசி.*

## 11. தேவியர்

### சாமுண்டி

பகர்வலம் சிகரம் வைத்திடக் கையிற் பதும கோசம்
சுகமுறக் காட்டிக் காலைத் தூக்கியே மடக்கிக் காட்டல்
தகைமைசேர் பரத நூலோர் சாமுண்டிக் காகு மென்று
மகிமையா யுரைத்தா ரிந்த வையக மறிய மானே! (85)

மூதையினபிநயம்

இடங்கட காமு கஞ்செய் தினியதாம் வலக்கை தன்னைத்
தொடரவே திட்ட மாய தோமுக பதும கோசம்
படியவே பற்றி யப்பா லதோமுக திஷ்டி பார்த்தல்
படிமிசைச் சேஷ்டா தேவிக் காமெனப் பகரு மாதே! (86)

விஜயலட்சுமி

இசையவே வாயுஸ் தானந் தனினின் றிடது கையை
வசைகட காமு கத்தாய் வலஞ்சூசி யுக்ர திஷ்டி
விசையுறப் பார்த்த லாகும் விஜயலட் சுமிக்கி தென்று
அசைவறப் பரத நூலோ ரருளினர் கமல மாதே! (87)

வீரலக்ஷ்மி

சேரவே யிடது கையைக் கடகாமு கமதாய்ச் சேர்த்துக்
கருடன் வலது கையின் த்ரிபதாகங் குறுக்கே காட்டிச்
சாரவே திருட்டி தன்னைச் சலனத்தைச் செய்த லாகும்
வீரலட் சுமிக்கே யென்று விண்டனர் நூல்வல் லோரே. (88)

மகேசுவரி

ஏலவா யுஸ்தா னத்தி லிடங்கட காமு கஞ்செய்
மேலதாம் வலது கையை மிருகசிர மலது சக்கரம்
கோலமாய்ப் பிடித்துக் காட்டற் கூறுமே மகேசுவரிக்கென்
றுலஞ்சேர் விழியினுளே யறைந்தனர் நூல்வல் லோரே. (89)

கௌமாரி

தவமுறும் வலம்ப தாகத் தைக்கடி கையிலே வைத்துக்
கவியவே யிடது கையைக் கடகாமு கமதாய்ப் பற்றி
அவைமார்பு நேராய்க் காட்டி வாயுத்தா னத்தி னிற்றல்
கவுமா ரிக்கு மென்றே கருதுவாய் கமல மாதே! (90)

வராகி

முகத்தையஞ் சலிபோ னீட்டி முன்னிரு கைக டன்னில்
தொகையதாந் த்ரிபதா கத்தைத் தோளுக்கு நேர தாக
முகியவே நிறுத்தி யேயான் முத்திரை யாகக் காட்டப்
புகலுவர் வராகிக் கென்றே புவிமிசை நூல்வல் லோரே. (91)

### வைஷ்ணவி

கடகாமு கம்மி டக்கை வலதுகைத் திரிப தாகம்
வடிவுள தோளி னேராய் வைத்ததை மார்பி னேராய்
அடவுடன் பிடித்துக் காட்ட வதுவைஷ்ண விக்கா மென்று
படிமிசைப் பரத நூலோர் பகர்ந்ததை யறிந்து கொள்ளே. (92)

### பூமிதேவி

காணவே யிடக்க ரத்தைக் கடகாமு கமதாய்ப் பற்றிப்
பூணவே வலம்ப தாகம் பொருந்தக்கீழ் நோக்கிப் பாதம்
பேணவே நடித்தற் போலப் பிரியமாய்க் காட்டி நிற்றல்
வேணுநேர் தோளி ஞளே ! பூமிதே விக்காய் விள்ளே. (93)

### கங்காதேவி

இனிவலங் கர்த்த ரிக்கை மேனேக்கி யிடப்ப தாகம்
பனுவலா யேந்திப் பின்ன தோமுக மாகப் பார்த்தல்
புனிதமாங் கங்கா தேவிக் காமெனப் புவியின் கண்ணே
இனமுடன் பரதங் கற்ற யாவரு மறிய வோதே. (94)

### தேவியர்

1. **துர்க்கை:** *இடக்கையைச் சிகரமாக்கி வலக்கையைக் கடகாமுகம் பிடித்து, கழுத்து மட்டும் நடத்தி அடைவுடன் காட்டுதல்.*

2. **சாமுண்டி:** *வலம் சிகரமாக்கி, இடக்கையில் பதுமகோசம் காட்டி, காலைத் தூக்கி மடக்கிக் காட்டடல்.*

3. **மூதை:** *இடம் கடகாமுகமாக்கி, வலம் அதோமுகப் பதுமகோசமாக்கி, அதோமுகத் திருஷ்டியுடன் பார்த்தல்.*

4. **விஜயலக்ஷ்மி:** *வாயுஸ்தானத்தில் நின்று, இடக்கையைக் கடகாமுகமும், வலம் சூசியும் ஆக்கி, உக்கிர திருஷ்டியுடன் விசையுறப் பார்த்தல்.*

5. **வீரலக்ஷ்மி:** *இடக்கையில் கடகாமுகம் பிடித்து, வலக்கையில் திரிபதாகத்தைக் குறுக்கே காட்டி, சலன திருஷ்டியாகப் பார்த்தல்.*

6. **மகேசுவரி :** வாயுஸ்தானத்தில் நின்று, இடக்கையில் கடகாமுகமும், வலக்கையில் மிருகசிரம் அல்லது சக்கரம் அமைத்து, கோலமாய்ப் பிடித்துக்காட்டல்.

7. **கௌமாரி :** வலப்பதாகத்தைக் கடிகையிலே வைத்து, இடக்கை கடகாமுகத்தை மார்பு நேராய்க் காட்டி வாயு ஸ்தானத்தில் நிற்றல்.

8. **வராகி :** முகத்தை அஞ்சலிபோல் நீட்டி, இருகைகளாலும் திரிபதாகம் செய்து தோளுக்கு நேராக நிறுத்தி, ஆன் முத்திரையாகக் காட்டல்.

9. **வைஷ்ணவி :** இடக்கை கடகாமுகம், வலக்கை திரிபதாகம் பிடித்துத் தோளின் நேராக வைத்து, பிறகு மார்பின் நேராய் அடைவுடன் பிடித்துக் காட்டல்.

10. **பூமிதேவி :** இடக்கை கடகாமுகமாக்கி, வலம் பதாகம் பொருந்த, கீழ்நோக்கி, பாதத்தை நடித்தற்போலக் காட்டி நிற்றல்.

11. **கங்காதேவி :** வலக்கையில் கர்த்தரிக்கையை மேல் நோக்கிப் பிடித்து, இடக்கையைப் பதாகமாக ஏந்தி, அதோமுகமாய்ப் பார்த்தல்.

பிற்சேர்பு முற்றும்

---

# செய்யுள்களின் முதற்குறிப்பகராதி

## (எண் - செய்யுள் எண்)

### முற்சேர்பு

## நூல்

## பிற்சேர்பு

# அருந்தொடர்களின் அகராதி

(எண் - பக்க எண்)

---